




இயற்கையான வாஞ்சையுடன்

அடைய விரும்புதல்

குழந்தைக்கு ஆரோககியத்தைத்

தரும்

வுட்வார்ட் வைத்தியனின

"இரைப் வாட்டர்"

என்னும் மருந்துத் திராவகம

# WOODWARD'S
## GRIPE WATER

W. WOODWARD LTD.. LONDON. ENGLAND

க்ரைப் வாட்டர் இப்பொழுது மருந்து சாமான்கள் கட்டுப்பாடு அறிக்கையில் சேர்க்கப் பட்டிருக்கிறது. உபயோகிப்பவரின் விலை: பாட்டில் விலை ரூ. 2-2-0

# சுதேசமித்திரன்

வாரப் பதிப்பு

மஹாபாரத ஸாரம் பக்கம் 15

உக்ரோதயம் (தொடர்கதை) பக்கம் 20

வியஹு வைகாசி மீ 6௳  1946ளு மே மீ 19௳


## ஸிம்லா மகாநாட்டின் முறிவு



ஸிம்லா மகாநாடு முறிந்து விட்டது. பிரிட்டிஷ் மந்திரிகள் தூது கோஷ்டியும், வைஸ்ராயும் காங்கிரஸ்—லீக் தலைவர்களுடன் கூடி கூடிப் பேசியதெல்லாம் வியர்த்தம். ஆனால் இதுபலரும் ஏற்கனவே எதிர்பார்த்தது தான். ஏனெனில் எதிர்கால அரசியல் பற்றி காங்கிரஸ் மனோபாவத்துக்கும், லீக் கருத்துக்கும் முக்கிய அம்சங்களில் ஒருமைப்பாடு இல்லையென்பது முன்பே தெளிவான விஷயம். நாட்டைத் துண்டாடக்கூடாது; அகில இந்தியாவுக்கும் ஒரே சமஷ்டி சர்க்கார் ஏற்பட வேண்டும் என்பதே காங்கிரஸின் தீர்மானமான கொள்கை. எனினும் அது லீகுக்குத் தன்னாலானவரை விட்டுக் கொடுக்கத் தயாராயிருந்திருக்கிறது. காங்கிரஸ் யோசனைப்படி, சமஷ்டி சர்க்காரின் அதிகாரத்துக்குள்ளாகும் விஷயங்கள் கூடிய வரை குறைவாகவே இருக்கும்; அவற்றை நிர்வகிப்பதற்கு வேண்டிய பணத்திற்கு வழி செய்துகொள்ள அச்சர்க்காருக்கு அதிகாரமிருக்கும்; மற்ற எல்லா விஷயங்களிலும் மாகாணங்களுக்கே பரிபூரண அதிகாரமிருந்து வரும். ஆனால் முஸ்லீம்கள் மிகுந்த மாகாணங்கள் முற்றிலும் சுயேச்சையான ராஜ்யங்களாக வேண்டுமென்ற தனது கோரிக்கையை முஸ்லிம் லீக் சிறிதும் விட்டுக்கொடுக்கத் தயாராயில்லை. இந்நிலையில் அவ்விருதரப்பாரிடையே ஒரு உடன்பாடு ஏற்படுவது எவ்வாறு சாத்தியம்! எனினும் அவர்களிடையே, ஒரு சமரசம் விளைக்க பிரிட்டிஷ் மந்திரிகள் தங்களுக்கு உசிதமாகத் தோன்றிய முறையில் முயன்று பார்த்தார்கள். அது பலிக்கவில்லையென்பது இப்போது தெளிவாகிவிட்டது.

ஆனால் இத்துடன் பிரிட்டிஷ் மந்திரிகளின் வேலை முடிந்து விடவில்லை. இதை அவர்களே சுட்டிக்காட்டியிருக்கிறார்கள். ஆட்சிப் பொறுப்பை இந்தியர் கைக்கு மாற்றுவது தான் அவர்கள் மேற்கொண்ட வேலை. இதை நடத்தி வைக்க அவர்கள் இதுவரை ஒரு குறிப்பிட்ட முறை பயன்படுமா என்று சோதித்துப் பார்த்தார்கள். அதாவது எதிர்கால நிரந்தர அரசியல்பற்றிய முக்கிய அம்சங்களில் காங்கிரஸுக்கும், லீகுக்கும் ஏற்படும் ஒரு உடன்பாட்டை அடிப்படையாகக் கொண்டு அதிகாரத்தை இந்தியர் கைக்கு மாற்ற முடியுமாவென்றுபார்த்தார்கள். அவ்வழி சாத்தியமில்லையென்று தீர்ந்து போய் விட்டது. அடுத்தபடியாக பிரிட்டிஷ் மந்திரிகள் செய்ய வேண்டியதென்ன? ஆட்சி அதிகாரத்தை பொதுஜன ஆதரவுள்ள ஒரு இடைக்கால சர்க்காரிடம் மாற்றி, எதிர் கால அரசியலுக்கான ஏற்பாட்டை அவர்களே செய்யும்படி விடுவதுதான். அவர்கள் முதலிலேயே இம்முறையைக் கையாண்டிருக்க வேண்டும் என்று சுட்டிக் காட்டுவோருண்டு. அது எங்ஙனமாயினும் தற்போது அவர்கள் கடமையைப்பற்றி சிறிதும் கருத்து வேறுபாடில்லை. இடைக்கால சர்க்கார் அமைப்புக்கான ஒரு திட்டத்தை பிரிட்டிஷ் மந்திரிகள் ஏற்கனவே பூர்த்தி செய்து விட்டதாகத் தெரிகிறது. அச்சர்க்காரில் யார், யார் அங்கம் வகிப்பதென்பதும் தீர்மானிக்கப்பட்டுவிட்டதாக செய்திகள் வந்து கொண்டிருக்கின்றன. இடைக்கால சர்க்கார் திட்டம் காங்கிரஸ், லீக் இரண்டுக்கும் திருப்தியளிக்கக்கூடியதுதானா, அவற்றில் ஒரு தரப்பு அதை ஏற்காவிட்டால் பிறகு இத்திட்டத்தின் கதியென்ன, இத்தகைய விஷயங்கள் இவ்வாரக்கடைசிக்குள் தெளிவாகி விடும்.

---

# யூதர் வெருட்டல்




யூதர் புரட்சி ஸ்தாபனத்தின் தலைவரான டாக்டர் லூயிஆல்ட்மன் என்பவர் பாலஸ்தீன விஷயத்தில் பிரிட்டன் கையாண்டுவரும் வேலை முறையைக் கடுமையாகக் கண்டித்து ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளார். "அவசியமானால் ஆயுத பலத்தைக் கொண்டு பாலஸ்தீனத்தில் ஒரு யூத சர்க்காரை ஏற்படுத்துவோம்" என்று அவர் கூறுகிறார்.

"யூதருக்குக் கொடுத்த வாக்குறுதிகளையெல்லாம் பிரிட்டன் மீறிவிட்டது. இந்நிலையில் பாலஸ்தீனத்தை ஆள பிரிட்டிஷாருக்கு எந்த வகையிலும் உரிமை கிடையாது. பிரிட்டன் புரிந்துகொள்ளக் கூடிய பாஷை பலாத்காரம் ஒன்றுதான் என்றும் அவ்வறிக்கை கூறுகிறது.

## ரஷ்யக் குற்றச்சாட்டு

பிரிட்டிஷ்-அமெரிக்க ஆக்கிரமிப்பிலுள்ள மேற்கு ஜெர்மனியில் ஜெர்மன் பிற்போக்காளர்கள் மீண்டும் தலையெடுத்துக்கொண்டிருப்பதாக மாஸ்கோ ரேடியோ கூறுகிறது. டாக்டர் ஹியுகன்பர்க் என்பவர் அந்த பிற்போக்காளர் கூட்டத்தின் தலைவர் என்றும் அவர் ஹிட்லர் அதிகாரத்திற்கு வரத் தீவிரமாக உதவியவர்களில் ஒருவர் என்றும் ரஷ்ய ரேடியோ அறிவிக்கிறது. இது உண்மையில் மேற்கு ஜெர்மனியிலுள்ள பிரிட்டிஷ்-அமெரிக்க நிர்வாகிகள்மீது ஒரு கடுமையான குற்றச்சாட்டாகும்.

## பர்மாவில் போட்டி சர்க்கார்

பர்மாவிலுள்ள பாஸிஸ்ட் எதிர்ப்புக் கட்சி தானாகவே ஒரு தேர்தல் நடத்தி ஒரு சுயேச்சை சர்க்கார் ஏற்படுத்தப் போவதாக ஒரு அறிக்கை விடுத்திருக்கிறது. தற்போதைய சர்க்கார் விஷயத்தில் அக்கட்சிக்குள்ள முக்கியக் குறைகள் வருமாறு:—சட்டசபைத் தேர்தலுக்குத் திட்டமாகத் தேதி குறிப்பிடப்படவில்லை: 18-வயதை அடைந்தவர்களுக்கெல்லாம் வாக்குரிமையளிக்கும் ஏற்பாடு அங்கிகரிக்கப்படவில்லை. மேலும் இக்கட்சியினர் ஆரம்பத்திலிருந்தே நிர்வாக சபையுடன் ஒத்துழைக்க மறுத்து வந்திருக்கின்றனர். அவர்கள் குடியேற்ற நாட்டந்தஸ்தைச் சிறிதும் விரும்பவில்லை; பூரண சுதந்திரமேவேண்டுமென்று வற்புறுத்துகின்றனர்.

## ஜப்பானியர் ஆட்சேபம்

யுத்தக்குற்றவாளிகள் என்ற முறையில் மாஜி ஜப்பானியப் பிரதம மந்திரியான ஜெனரல் டோஜோ முதலிய ஜப்பானியப் பிரமுகர்கள் மீது டோக்கியோவில் வழக்கு நடப்பது வாசகர்களுக்குத் தெரியும். எதிரிகளின் வக்கீல் எதிர் வாதம் நடத்துகையில் அவர்களை விசாரிக்க (சர்வதேச) கோர்ட்டுக்குச் சிறிதும் உரிமையில்லையென்றார். "ஜெர்மனியைப்போல் ஜப்பானை நடத்துவதற்கில்லை. ஏனெனில் அவ்விரு நாடுகளும் சரணடைந்த முறைகளில் விசேஷ வித்தியாசமுண்டு. ஜெர்மனி கடைசிவரை எதிர்த்து நின்று இறுதியாகக் குலைவுற்றது. ஆனால் ஜப்பான் சரணடைய வேண்டுமென்று நேசதேச அதிகாரிகள் விடுத்த பாட்ஸ்டாம் அறிக்கையின் பொழுது நேசதேசத்துருப்புகள் ஜப்பானுக்குள் அடியெடுத்து வைக்கக்கூட இல்லை. பாட்ஸ்டாம் அறிக்கையில் பிரஸ்தாபமேயில்லாத ஒரு வகையான குற்றங்களை இப்போது பல ஜப்பானியப்பிரமுகர்கள் மீது சாட்டிய விசாரணை நடத்துவது சிறிகும் நியாயமல்ல" என்று எதிரிகள் வக்கீல் வாதித்தார்.

## பெர்ஸிய உள்நாட்டுத் தகராறு

வட பெர்ஸிய மாகாணமான அஸர்பைஜானிலுள்ள சர்க்காருக்கும், பெர்ஸிய சர்க்காருக்கும் நடந்து வந்த சமரசப் பேச்சில் ஒரு முட்டுக்கட்டையான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அம்மாகாணக் கவர்னரையும், ராணுவ-போலீஸ் தலைவர்களையும் நியமிக்கும் அதிகாரம் தங்களுக்கே இருக்க வேண்டுமென்று அஸர்பைஜான் அதிகாரிகள் வற்புறுத்துகின்றார்கள். இதுமட்டுமின்றி அஸர்பைஜானில் சர்க்கார் நிலத்தை குடியானவர்களுக்கு வினியோகிக்கும் விஷயத்திலும் மேற்குறித்த இருதரப்பினருக்கும் அபிப்பிராயபேதமேற்பட்டிருக்கிறது. இத்தகராறை முன்னிட்டு பதவியை ராஜினாமா செய்துவிடப் போவதாக டெஹரான் சர்க்காரின் பிரதம மந்திரி ஒரு அறிக்கை விடுத்திருக்கிறார்.

## எகிப்திலிருந்து பிரிட்டிஷ் வெளியேற்றம்

எகிப்திலிருந்து பிரிட்டிஷ் படைகள் வெளியேற ஆரம்பித்துவிட்டதாக எகிப்துப் பிரதம மந்திரி அறிவிக்கிறார். ஸூடான் எகிப்துடன் மறுபடி ஐக்கியமாக வேண்டுமென்பதும் எகிப்தின் கோரிக்கைகளில் ஒன்று. இப்பிரச்னையைத்தாம் கை விட்டு விடவில்லையென்றும் அங்கு தற்போதுள்ள பிரிட்டிஷ்-எகிப்தியர் கூட்டாட்சி மறைந்து அப்பிரதேசம் எகிப்துசர்க்காரின் ஆட்சிக்கு உட்படுத்தப்படவேண்டுமென்று தாம் வற்புறுத்தப்போவதாகவும் எகிப்துப்பிரதம மந்திரி கூறுகிறார்.

## ஸ்பெயினுக்கு பிரிட்டிஷ் வற்புறுத்தல்

பிரிட்டன் ஸ்பெயினுக்கு விடுத்துள்ள ஒரு முறையீட்டில் அங்குள்ள ஜெர்மனியர், ஜெர்மன் சொத்து முதலிய விஷயங்களில் ஸ்பானிய சர்க்கார் இன்னும் தீவிரமான நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தியிருக்கிறது.

# கோபுவின் யுக்தி

★ ★

—என். என்—

"அவசியம் ஒரு வாரமாவது லீவு எடுத்துக்கொண்டு வா. கல்யாணத்தைச் சாக்கிட்டாவது நீ இங்கே இரண்டு, மூன்று நாட்களாவது தங்கிவிட்டுபோவாய்என்றுநம்புகிறேன் உன் வரவை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்', என்று கோபுவின் ஆப்த நண்பனான நரசிம்மன் தஞ்சாவூரிலிருந்து எழுதியிருந்தான். நரசிம்மனின் தங்கை தங்கத்திற்குத்தான் விவாகம் நடைபெறவிருந்தது.

கோபுவிற்குச் சென்னையில் ஒரு ஆங்கில வர்த்தகக் கம்பெனியில் குமாஸ்தா உத்தியோகம். மாதம் அறுபது ரூபாய் சம்பளம். அவனுடைய ஆபீஸ் மானேஜரான வுட்ஸ்டோன் துரை மிகவும் முரட்டுத்தனம் படைத்தவன். குமாஸ்தாக்கள் வேலை செய்யப் பிறந்த யந்திரங்கள்தான் என்ற கொள்கையை உடையவன். சிறிதும் தயா தாட்சண்யமின்றி அவர்களிடம் வேலை வாங்குவதில் அவனை மிஞ்சக்கூடியவர் எவருமே இருக்க முடியாது! எவ்வளவு அத்தியாவசியமான விஷயத்திற்காக 'லீவு' கேட்டாலும், ஒரே வார்த்தையில் 'கிடையாது' என்று பதில் சொல்லிவிடுவான்!

இப்படிப்பட்ட குணதிசயங்களையுடைய துரையிடமிருந்து கோபு எப்படி ஒரு வார லீவு வாங்க முடியும்...அதுவும், நண்பனின் தங்கையின் விவாகத்திற்குப் போகவேண்டுமென்ற காரணத்தைச் சொன்னாலோ, கேட்கவே வேண்டாம்! லீவு மனுவைக் கிழித்துக் கோபுவின் தலையிலேயே போட்டுவிடுவான் துரை! கோபுவின் மூளை வெகு தீவிரமாக வேலை செய்தது.

கடைசியில் அவனுக்கு ஒரு யுக்தி தோன்றியது...

பிற்பகல் இரண்டு மணியிருக்கும். நிசப்தம் பரவியிருந்த 'ஹம்பக்ஸன் கம்பெனி' ஆபீஸில் திடீரென்று பரபரப்பு ஏற்பட்டது. குமாஸ்தாக்களும் இதர சிப்பந்திகளும் கலவரத்துடன் தங்களுடைய ஆசனங்களைவிட்டு எழுந்து கோபுவின் ஆசனத்தை நோக்கி ஓடினர்.

மேற்கூறிய பரபரப்புக்குக் காரணம் கோபு திடீரென்று தன் நாற்காலியிலிருந்து மயக்க முற்றுக் கீழே விழுந்து விட்டதுதான்!

அவனைச் சுற்றியிருந்தவர்கள் அவனுக்குச் சைத்தியோபசாரம் செய்தனர் என்றாலும், கோபு வெகு நேரம் வரையில் தன் கண்களையே திறக்கவில்லை!

கோபு மயக்கமடைந்து கீழே விழுந்துவிட்ட செய்தி துரை காதுக்கும் எட்டியது. அவன் தன் அறையினின்று வந்து, கோபுவைப் பார்த்தான். அப்பொழுது கோபு கண்களைத் திறக்காமல் படுத்துக்கொண்டிருந்தான்.

பலஹீனம்தான் காரணமாயிருக்க வேண்டும். சற்று ஓய்வு எடுத்துக்கொண்டால் சரியாகிவிடும்" என்று தலைமை குமாஸ்தா தாத்தாச்சாரியார் துரையிடம் சொல்லிக்கொண்டிருந்ததைக் கேட்ட கோபு தன் மனத்திற்குள்ளாகவே சிரித்துக்கொண்டான்.

அப்புறம் கேட்பானேன்?... சிறிது நேரங் கழித்து: எழுந்திருந்து கோபு துரையிடம் சென்று, தனக்கு ரொம்பவும் பலஹீனமாயிருக்கிறது என்றும், குறைந்தது ஒரு வார லீவு எடுத்துக்கொண்டால்தான் உடம்பு குணப்படும் என்றும் முறையிட்டுக் கொண்டான். அவன் கேட்டுக்கொண்ட முறை துரையின் கல் மனதையும் இளக வைத்துவிட்டது!

"சரி...ஒரு வார லீவுதருகிறேன். ...உடம்பைக் கவனித்துக்கொள். ஊர் சுற்றாதே!" என்றான் துரை.

"உங்களுக்கு ரொம்ப வந்தனம், ஸார்!" என்று பல்லைக் காட்டிய வண்ணம், அசட்டுச் சிரிப்புச் சிரித்துவிட்டு வெளியே வந்தான் கோபு. அவன் உடலும், உள்ளமும் பூரித்துவிட்டன! ஏதோ புதையல் கிடைத்த மாதிரி அவனுக்குத் தோன்றியது.

அன்றிரவே தஞ்சைக்குக் கிளம்பிவிட்டான்...

தஞ்சாவூரில் நரசிம்மன் வீட்டில் கல்யாணம் வெகு விமரிசையாகத்தான் நடந்தது. கோபு தன் ஆபீஸையே அடியோடு மறந்தவனாய் நான்கு நாட்கள் வெகு உல்லாசமாகக் கழித்தான். இன்னும் இரண்டு நாள் லீவுதான் பாக்கியிருந்தது. அன்றிரவு தஞ்சையை விட்டுப் புறப்பட்டுச் சென்னைக்குச் சென்று, அங்கே ஒரு நாள் ஓய்வு எடுத்துக் கொண்டால், மறுநாள் ஆபீஸிற்குச் செல்ல சௌகரியமாயிருக்கும் என்று தோன்றியதால், நண்பனிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பினான்.

சென்னை செல்லும் 'போட் மெயில்' தஞ்சாவூர் ஸ்டேஷன் ப்ளாட்பாரத்தை அடைந்ததும், அங்கே கூடியிருந்த ஜனக் கூட்டம் முழுவதும் தன் முழு வேகத்துடன் ரயிலின் மீது மோதியது!... இடித்துப் பொடி பண்ணும் கூட்டத்தைச் சமாளித்துக்கொண்டு எங்கேயாவது தன் கால்களை வைத்துக்கொள்ள இடம் கிடைக்குமாவென்று கோபு ஒவ்வொரு வண்டியாகப் பார்வையிட்டுக் கொண்டு வந்தான்.

முதல் வகுப்பு 'கம்பார்ட்மெண்ட்' ஒன்றில், தன் கழுத்தை வெளியே நீட்டியவண்ணம் உட்கார்ந்திருந்த ஒரு உருவத்தைக் கண்டதும், கோபு தன்னையுமறியாமல் சிலைபோல் நின்றுவிட்டான்! அவன் கண்ட காட்சியை அவனாலே நம்ப முடியவில்லை!

ஆம்...அங்கே உட்கார்ந்திருந்தது அவன் ஆபீஸ் மானேஜரான வுட்ஸ்டோன் துரையேதான்! சந்தேகமேயில்லை!

'இந்தக் கிராதகன் இங்கே, இப்பொழுது, எப்படித் தோன்றினான்? ஒருவேளை திருச்சியிலுள்ள கிளை ஆபீஸிற்குப் போய்விட்டுத் திரும்பி வருகிறானோ?' என்ற கேள்விகளுக்கு விடை தேடக் கோபுவிற்கு அவகாசம் இல்லாமற் போய்விட்டது. ஏனென்றால், துரை தன்னைக் கவனித்துக் கூர்ந்து பார்ப்பதை அரை நொடியில் உணர்ந்து கொண்டான்.

"உடம்பு சரியாகவில்லை என்று பொய் சொல்லி என்னை ஏமாற்றி லீவு வாங்கிக்கொண்டு இங்கே ஊர் சுற்றிக்கொண்டிருக்கிறாயா?" என்று துரை கேட்டுவிட்டால் என்ன பதில் அளிப்பது?...ஐயோ, நெஞ்சில் ஈரமில்லாத பாவியாயிற்றே! ......தயாதாட்சண்யமின்றிச் சீட்டைக் கிழித்தாலும் கிழித்துவிடுவானே பாவி!...

அந்த சில வினாடிகளுக்குள் கோபுவின் மனம் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிப் புழுங்கித் தவித்தது......உலகமே

பெயர்ந்துவிட்டதுபோல் தோன்றியது....

"என்ன சொல்வது?......என்ன செய்வது?" என்று யோசிக்க வாரம்பிப்பதற்குள், துரை அவனைப் பார்த்து, "ஹே!...கோபு... இங்கே வா!' என்று அதிகார தோரணையுடன் கூப்பிட்டான்.

கோபுவின் மனதில் தெய்வாதீனமாகப் பளிச்சென்று ஒரு யுக்தி உதயமாயிற்று. 'துணிந்து ஒரு கை பார்த்துவிடுகிறேன்!' என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டு, கோபு துரை கூப்பிட்டதைச்சிறிதும் லட்சியம் செய்யாதவனாக நின்றான்.

துரை ஆத்திரத்துடன் மீண்டும் "ஹே!,...கோபு....உன்னைத்தான்! காது கேட்கவில்லை? இங்கே வா!" என்று கத்தினான்.

"யாரது?...என்னைக் கூப்பிட்டீர்களா?...எதற்கு?...... முதலில் என் பெயர் கோபு இல்லை என்பதை நீங்கள் உணரவேண்டும்! என்றான் கோபு. துரையை அணுகிக்கொண்டே அவன் பார்வையிலும் பேச்சிலும் அலட்சியம் பொங்கித் ததும்பியது!

"என்ன என்னிடமா இப்படிப் பேசுகிறாய்?...பேஷ் உனக்குப் புத்திமாருட்டமா, என்ன? இங்கே என்ன செய்துகொண்டிருக்கிறாய்?' என்று துரை கண்களில் தீப்பொறி பறக்கக் கேட்டான்.

கோபு மிகவும் நிதானமாகவும், அடக்கத்துடனும், "மிஸ்டர், எனக்குப்புத்தி மாருட்டம் இல்லை. உங்களுக்குத்தான் சித்த ஸ்வாதீனம் இல்லை என்று எண்ண வேண்டியிருக்கிறது......... நான் இங்கே என்ன செய்துகொண்டிருக்கிறேன் என்பதை உமக்குத் தெரியப்படுத்த வேண்டியது அவசியம் என்பது எனக்குத் தோன்றவில்லை...இருந்தாலும், சொல்கிறேன். எனக்கு அந்த ஊரில் பழ வியாபாரம்...மிக மிக உயர்ந்த கொய்யாப் பழங்கள் வேண்டுமென்றால், தஞ்சாவூர் முழுவதிலும் என் கடை ஒன்றிலேதான் கிடைக்கும்! என்றான்.

அப்பொழுது துரையின் முகத்தில் அசடு வழிய ஆரம்பித்ததைக் கண்ட கோபு, தன் யுக்தி வெற்றியடைந்து விட்டது என்பதை உணர்ந்து, தைர்யம் வரப்பெற்றவனாய் துரையைப்பார்த்துச் சிரித்தவண்ணம், "அதனால் பரவாயில்லை...உங்களைப் போலவே பலர் என்னைப் பார்த்து, 'கோபு' என்று எண்ணி ஏமாந்து போயிருக்கிறார்கள். என் தம்பி கோபுவிற்கும் எனக்கும் இம்மியளவு கூட வித்தியாசம் கிடையாது. நாங்கள் இரட்டையாகப் பிறந்தோம். குரல் கூட இருவருக்கும் அநேகமாக ஒன்றாகத்தானிக்கும் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! கோபுவிற்குச் சென்னையில் ஒரு கம்பெனியில் உத்தியோகம்...அவனுக்குக் கூட உடம்பு அசௌகரியமென்று நேற்று ஒரு கடிதம் வந்தது...போய்ப் பார்க்கலாமென்றால், எனக்கு ஒழியவில்லை...நாளைக்குக் கடிதமாவது எழுதிப்போடவேண்டும். ஹும் அடடா...மறந்தே போய் விட்டேன்! என்ன முட்டாள்தனம்! தயவுசெய்து மன்னிக்கவேண்டும்! ...நான் இவ்வளவு நேரம் என்னைப்பற்றியும் கோபுவைப்பற்றியுமே பேசிக்கொண்டிருந்து விட்டேனே! தாங்கள் யார் என்பதையறியலாமா? என்று வினயத்துடன் கேட்டான்.

உங்கள் சகோதரன் கோபு வேலை செய்யும் ஆபீஸின் மானேஜர் நான் தான், என் பெயர் வுட்ஸ்டோன்!

அடடா!...தெரியாமல் உங்களை அவமரியாதையாகப் பேசிவிட்டேனே! மன்னிப்பீர்களா?...உங்களுடன் சாவகாசமாக..." என்று கோபு பேசிக்கொண்டிருக்கையிலேயே, கார்டு தன் ஊதலையெடுத்து ஊதினார்.

"சரி...நான் போய் வருகிறேன் ...ஞாபகமிருக்கட்டும்...என் பெயர் சோமு, என்று சொல்லிக்கொண்டு, துரையிடம் விடைபெற்றுச்சென்றான் கோபு. துரையின் கண்ணில் படாமல், ஏதோ ஒரு பெட்டிக்குள் நுழைந்தான். அப்பாடா!...ஒரு பெரிய கண்டத்திலிருந்து தப்பித்தேன்! என்று பெருமூச்சு விட்டான்.

இரண்டு நாட்களுக்குப்பிறகு, ஆபீஸிற்கு வந்தவுடன் கோபு தன் கையிலிருந்த ஒரு சிறிய கூடையுடன் மானேஜரின் அறைக்குள் நுழைந்தான். அவனை துரை ஒரு தடவைக்கு எட்டு தடவைகளாக ஊடுருவிப்பார்த்தான்... ஆயினும் கோபு மனதைத் தளரவிடாமல், ஒன்றுமறியாதவன் போல், வெகு சகஜமாக நின்றான்.

'என்ன சமாச்சாரம்?" என்று, சற்றுக் கடுமையான குரலில் கேட்டான் துரை. அவனைப் பிடித்த சந்தேகப் பேய் இன்னும் பூராவும் விலகவில்லையென்பதைக் கோபு உணர்ந்துகொண்டான்.

"உடம்பு தேவலை.........இன்று வேலைக்கு வந்துவிட்டேன்...ஹும் இதோ, இந்தக்கூடை தஞ்சாவூரிலிருந்து, என் சகோதரன் சோமுவிடமிருந்து வந்திருக்கிறது...அத்துடன் ஒரு கடிதமும் எழுதியிருக்கிறான். உங்களை அவன் தஞ்சாவூர் ஸ்டேஷனில் ரயிலில் சந்தித்தாலும் நீங்கள் இன்னார் என்று தெரிந்த பிறகு, அதிக நேரம் பேச அவகாசமில்லாமற் போனதற்காக மிகவும் வருத்தப்பட்டிருக்கிறான். நீங்கள் கூட முதலில் அவனை நான் தான் என்று எண்ணி ஏமாந்துவிட்டீர்களாமே!...எங்களிருவரையும் சேர்த்து நிறுத்திவைத்தால், சில சமயங்களில் எங்கள் தாயாருக்கே தடுமாறிவிடும், யார் கோபு, யார் சோமு என்று கண்டுபிடிக்க! இந்தக் கூடையில் உங்களுக்கென்று மிகவும் உயர்ந்த ரகத்தைச்சேர்ந்த கொய்யாப் பழங்களை அனுப்பியிருக்கிறான்...தயவு செய்து இதை ஏற்றுக்கொள்ளச் சொன்னான்..." என்று சொல்லிக் கொண்டே, மிகவும் வினயத்துடன் கூடையை துரையின் முன் வைத்தான். வுட்ஸ்டோன் துரையின் முகம் முதல் தடவையாக மலர்ந்தது. அதில் ஒரு புன்னகைகூடத் தோன்றியது......ஐந்து நிமிஷங்களுக்குப் பிறகு, துரையின் அறையை விட்டு வெளியே வந்த கோபு, தனக்கு மிகவும் ரஞ்சகமான கல்யாணி ராகத்தை உரக்க ஆலாபனம் செய்ததைக் கண்ட மற்ற குமாஸ்தாக்கள் விஷயம்புரியாது, விழித்தனர்!

## அட்டைப் படம்

★

ஆந்திர மன்னர்களின் மகோன்னத ஆட்சிக்கும் கலை ஆர்வத்திற்கும் சின்னமாக விளங்கிய "அமராவதி ஸ்தூபி"யின் படம்தான் இவ்விதழின் அட்டையை அலங்கரிக்கிறது. குண்டூர் ஜில்லாவில் இருக்கும் அமராவதி என்ற இடத்தில்தான் இந்த ஸ்தூபி 2100 வருஷங்களுக்கு முன்பு திகழ்ந்து விளங்கியது. அசோக சக்கரவர்த்தியின் மத ஆர்வமே இது ஏற்பட்டதற்கு காரணம் எனக் கூறப்படுகிறது.

# “ஸ்வர்ணலதா”

## (என். வி. பத்மாஸனி தேசிகின்)

பாக்யதாராவுக்கு விவாகமாகி ஒரு வருடமாகி விட்டது. அவள் கணவன் ஹரிஹரன் ஒரு சிற்பி. அவன் தன்னிடம் ஒருநாள்கூட உல்லாசமாகப் பொழுது போக்காமல் நாள் முழுவதும் ‘லொட், லொட்’ என்று சுத்தியால் கல்லைத் துளைத்துக்கொண்டிருப்பது அவளுக்கு மிகவும் வெறுப்பை அளித்தது. நல்ல நிலவில் தனிமையாகப் பூங்காவனத்திற்கு உலாவச் செல்வான் ஹரன். பாக்யதாரா தானும் வருகிறேன் என்பாள். நீ வந்தால் என் கற்பனை கலைந்துவிடும் என்பான் ஹரன். பாக்யதாராவுக்குக் கோபம் பொங்கிக்கொண்டு வரும். “உங்கள் கற்பனையும், சிற்பமும் நாசமாகப்போகட்டும். ஒரு தினமாவது நீங்கள் என்னுடன் ஸரஸமாகப் பேசி இருக்கிறீர்களா? எதற்காக என்னை விவாகம் செய்துகொண்டீர்கள். மற்ற இளம் தம்பதிகளைப் பாருங்கள். அவர்கள் எவ்வளவு ஆனந்தமாகக் கடற்கரைக்கும், பூங்காவனத்திற்கும், சினிமாவிற்கும் ஜோடி ஜோடியாகப் போகிறார்கள். உம்; நான் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்” என்று வெறுப்புடன் கூறுவாள். ஹரன் பதில் ஒன்றும் கூறாமல் மௌனமாக இருந்துவிடுவான். இவ்வித சமயங்களில் வார்த்தைகள் மேலே வளர்வதற்கு இடமில்லாமல் மௌனயாக ஹரன் இருப்பது பாக்யதாராவுக்குச் சகிக்கமுடியாத வேதனையைக் கொடுத்தது. கல்லைக் கட்டிக்கொண்டு அழும் ஒரு சிற்பிக்குத் தான் மாலையிட அந்த பிரம்மன் தன் தலையில் எழுதி விட்டதை நினைத்து பிரம்மனைச் சபித்தாள்.

தான் இவ்விதம் ஒண்டிக் கட்டையாகக் காலம் கடத்துவது அவளுக்கு மிக கஷ்டமாக இருந்தது. அவளுக்கு அடிக்கடி ஜுரம் வர ஆரம்பித்தது. துணைக்குத் தன் தங்கை ஸ்வர்ணலதாவை அழைத்து தன்னிடம் வைத்துக்கொள்ள விரும்பினாள். அப்பொழுது ஸ்வர்ணலதா மெட்ரிகுலேஷன் படித்துக்கொண்டிருந்தாள். படிப்பு முடிந்ததும் தன் வீட்டிலிருந்துகொண்டு ஸ்வர்ணலதா மேல் படிப்பு படிக்கலாமென்றும், அவளை ஹாஸ்டலுக்கு அனுப்ப வேண்டாம் என்றும் பாக்யதாரா தன் தந்தைக்குக் கடிதம் எழுதினாள். அவள் தந்தையும் அதற்கு இசைந்து, ஸ்வர்ணலதாவை பாக்கியதாராவிடம் அனுப்பினார். ஸ்வர்ணலதா வந்த பிறகு வீடே கலகலப்பாக இருந்தது. கவிஞர்கள் வர்ணிக்கும் அழகு வாய்ந்தவள் ஸ்வர்ணலதா. கேட்கவேண்டுமா ஹரனின் குதூகலத்திற்கு? ஸ்வர்ணலதாவின் அந்த சம்பூர்ண அழகு காலபித்தனான ஹரனின் நேத்ரங்களுக்கு விருந்தாக இருந்தது. பூர்ண ஸௌந்தர்யத்தின் அழகைக் காண அலைந்து திரிந்த ஹரனின் அழகு தாபம் நிறைந்த நேத்ரங்கள் ஸ்வர்ணலதாவின் திவ்ய ஸௌந்தர்யத்தை அள்ளிப் பருகின.

ஸ்வர்ணலதாவும் ஹரனுடன் நிஷ்களங்கமான மனதுடன் சகஜமாகப் பழகினாள். அடிக்கடி பாக்யதாராவுக்கு உடம்புக்கு வந்துவிடும். அப்பொழுதெல்லாம் ஸ்வர்ணலதா அதிகாலையில் எழுந்திருந்து சமைத்துவிட்டு, அக்காளுக்கும் அவள் புருஷனுக்கும் பரிமாறிவிட்டு, தானும் சாப்பிட்டுவிட்டுக் காலேஜுக்குச் செல்வாள். காலேஜில் இருக்கும் நேரத்தைத் தவிர மற்ற நேரங்களில் வீட்டு வேலைகளைத் தானே வெகு உற்சாகத்துடன் செய்வாள். வேலை செய்வதில் எவ்வளவு உற்சாகமும், இன்பமும் இருக்கிறதென்று நிரூபித்துக் காட்டினாள் ஸ்வர்ணலதா. ஹரனுக்கும், பாக்யதாராவுக்கும் ஓடி ஓடி சிச்ருஷைகள் செய்வாள். ஸ்வர்ணலதாவின் வரவிற்குப் பிறகு ஹரனின் நடத்தையில் மாறுதல் ஏற்பட்டிருப்பதை பாக்யதாரா கவனித்தாள். ஸ்வர்ணலதா பாடங்களில் விளங்காத அர்த்தங்களை ஹரனிடம் கேட்டுத் தெரிந்துகொள்வாள். ஹரனும் அவளது கேள்விகளுக்குத் திருப்திகரமான பதிலை அளித்து, மிக அன்புடனும், ஆனால் பரிசுத்தமான மனதுடன் ஸ்வர்ணாவுடன் பழகுவான். பாக்யதாராவின் மனதில் சந்தேகம் என்னும் பேய் வாசம் செய்யத் தொடங்கியது. “மதி கெட்டுப்போய் ஸ்வர்ணலதாவை வரவழைத்து என் தலையில் நானே மண்ணை அள்ளிப்போட்டுக்கொண்டேனே!” என்று தன்னை நொந்துகொண்டாள்.

அன்று ஞாயிற்றுக்கிழமை. ஆதலால் ஸ்வர்ணலதா, காலேஜுக்குச் செல்லவில்லை, “ஸ்வர்ணா, இப்படி வந்து நில். உன்னைப் போல் மற்றொரு ஸ்வர்ணலதா செய்கிறேன்” என்றான் ஹரன். ஸ்வர்ணலதா சிரித்துக்கொண்டே நாற்காலியைப் பிடித்துக்கொண்டு நின்றாள். பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே கல் உருப்பெற்றுவிட்டது. ஸ்வர்ணலதா வியப்புடன் கண் இமைக்காமல் பார்த்துக்கொண்டு நின்றாள். “ஸ்வர்ணா, கொஞ்சநேரம் கட்டம் விளையாடலாம் வருகிறாயா?” என்று கூறிக்கொண்டே அங்கு வந்தாள் பாக்யதாரா. சற்று நேரம் எது சிலை, எது நிஜமான ஸ்வர்ணலதா? என்று திகைத்து நின்றாள். அவ்வளவு தத்ரூபமாக அமைந்துவிட்டது அந்தக் கற்சிலை. “அக்கா, அத்திம்பேரின் சிறபங்களைப் பார்த்தாயா? அவைகளுக்கு உயிர்கொடுக்கும் சக்தி மாத்திரம் இருந்தால் ப்ரும்மாவுடன் போட்டியிடக் கிளம்பிவிடுவார்” என்று ஹரனைப் புகழ்ந்தாள் ஸ்வர்ணலதா. பாக்யதாராவின் மனதில் பொறாமைத் தீ கொழுந்துவிட்டு எரியத் தொடங்கியது. மௌனமாக அவ்விடத்தை விட்டகன்றாள்.

மற்றொருநாள் எல்லாரும் நாடகம் பார்த்துவிட்டு வந்தார்கள். “ஸ்வர்ணா! நாடகம் எப்படி இருக்கிறது?” என்றான் ஹரன்.

“கதாநாயகியாக நடிப்பவளின் நடிப்புத் திறமை மிகவும் அபாரமானதுதான். ஆனால் அவள் இன்னும் சற்று அழகாக இருந்தால் நாடகத்தில் அந்த குறையும் இருந்திருக்காது’ என்றாள் ஸ்வர்ணலதா.

எல்லாரும் உன்னைப்போலவே அழகாய் இருக்க முடியுமா? அந்தக்கதாநாயகிபார்ட்டை உனக்குக் கொடுத்திருந்தால் வெகு ஜோராக

நாடகம் அமைந்திருக்கும்" என்று ஹரன் சிரித்துக்கொண்டே கூறினான். "அத்திம்பேர் எப்பொழுதும் கிண்டலாகத்தான் பேசுவார்" என்று கூறிச் சிரித்தாள் ஸ்வர்ணலதா. ஹரனின் அந்தப் புகழ்ச்சி பாக்யதாராவின் காதுகளில் நாரசம்போல் விழுந்தது. பொங்கி வந்த கோபத்தை அடக்கிக்கொண்டாள். ஸ்வர்ணலதா தன் சகோதரியின் மனோபாவத்தை அறிந்துகொள்ளவில்லை. வயது வந்த பெண்ணிற்குப் பிற புருஷனுடன் என்ன சிரிப்பு" என்று மனதிற்குள் கொதிப்படைந்தாள் பாக்யதாரா. மறுநாள் காலையில் ஹரன் சொந்த அலுவலாக வெளியூருக்குச் சென்றான். ஸ்வர்ணலதா காப்பிபோட்டு பாக்யதாராவுக்குக் கொடுத்துவிட்டு ஸ்நானம் செய்யக் கிணற்றடிக்குச் சென்றாள். துரிதமாக ஸ்நானம் செய்துவிட்டு ஈரப் புடவையுடன் சொட்ட, சொட்டக் கூடத்திற்கு வந்தாள். பாக்யதாரா இன்னும் காப்பி சாப்பிடாமல் சுவற்றில் சாய்ந்துகொண்டு கடு கடுத்த முகத்துடன் உட்கார்ந்திருப்பதைக் கண்டு "ஏன் அக்கா, காப்பி அப்படியே இருக்கிறதே. குளிர்ந்த ஜலம் மாதிரி 'ஜில்' என்றிருக்கிறதே" என்றாள். பாக்யதாரா பதில் கூறாமல், டம்ளரில் இருக்கும் காப்பியை கிண்ணத்தில் தெளிவாக ஊற்றிவிட்டு அடியாகக் காண்பித்தாள், நிறைய பொடி தங்கி இருந்தது. "பொடி விழுந்துவிட்டதா? நான் கவனிக்கவில்லை அக்கா" என்றாள் ஸ்வர்ணலதா. "எப்படிக் கவனிப்பாய்? அத்திம்பேருக்கு என்றால் எல்லாம் நன்றாய்ச் செவ்வாய்" என்றாள் பாக்யதாரா எரிச்சலுடன், ஸ்வர்ணலதா தன் சகோதரியைக் கூர்ந்து நோக்கினாள். அக்காவின் மனதில் குமுறிக்கொண்டிருக்கும் எண்ணங்களை கொஞ்சம், கொஞ்சமாக அறிந்துகொண்டாள். பொங்கி வந்த அழுகையை அடக்கிக்கொண்டு "எத்தனை நாளாக இந்த சந்தேகம் அக்கா? நீ முன்போல் என்னிடம் ஸரஸமாகப் பேசாததைக் கண்டு தேக அசௌக்யத்தினால் அவ்விதம் இருக்கிறாய் என்று நினைத்தேன். ஆனால், இத்தகைய எண்ணங்கள்தான் உன்னை உருக்குகிறதென்று நான் அறியவில்லை. நான் அத்திம்பேருடன் சகஜமாகப் பேசுவது உனக்கு வித்யாசமாகத் தோன்றினால் நான் அவருடன் பேசுவதை நிறுத்திக் கொள்கிறேன். நீ இவ்விதம் நினைப்பாய் என்று நான் கனவிலும் கருதவில்லை" என்றாள் படபடப்புடன். பாக்யதாரா பதில் ஒன்றும் கூறாமல் மௌனமாக இருந்தாள். ஆனால் சந்தேகத்தின் சாயை அவள் முகத்தில் ப்ரதிபலிப்பதைக் கண்டு பாக்யதாராவுக்குத் தன்மீது நம்பிக்கை ஏற்படவில்லை. என்றறிந்த ஸ்வர்ணலதா துயரம் நிறைந்த குரலில் கூறத் தொடங்கினாள். "அக்கா நிஷ்களங்கமான மனதில் களங்கம் ஏற்பட்ட பின் என்னால் இனி இங்கு இருக்க முடியாது, நான் ஹாஸ்டலுக்குப் போகிறேன்" என்றாள்.



பாக்யதாராவின் மனம் இளகவில்லை. எல்லாவற்றையும் மௌனத்துடன் கேட்டுக்கொண்டிருந்த பாக்யதாரா ஸ்வர்ணாவை நிமிர்ந்து பார்த்தாள். அந்தப் பார்வையில் பச்சாதாபம் இல்லை. வெறுப்பும், அவநம்பிக்கையும் கலந்திருந்தது.

"அக்கா! இன்னும் என்னை நம்பவில்லையா? என்னுடைய போதாத காலத்திற்குதான் இங்கு வந்தேன் போலும்."

பாக்யதாரா இப்பொழுது பேச ஆரம்பித்தாள். "ஸ்வர்ணம், அவரை நீ காதலிக்கவில்லை என்று எந்தக் கோவிலிலும் சத்தியம் செய்வாயா? அவர் உன்னைக் காதலிக்கிறார். உன் அழகுக்காக அவர் உன்னை நேசிக்கிறார். நீ என்னைக் காட்டிலும் நல்ல அழகி என்பதை ஒப்புக்கொள்கிறேன்; உன் அழகுதான் எனக்குச் சத்துருவாகிற்று. உன்னிடம் முன்போல் பக்ஷமாக இருக்க முடியாமல் போய்விட்டது. ஆம், உன் மீதும் குற்றமில்லை; அவர் மீதும் குற்றமில்லை. குற்றம் என்மீது தான் இருக்கிறது. ஆண் வர்க்கத்தின் ஸ்வபாவத்தை நன்கு அறிந்தும், உன்னை இங்கு அழைத்

தூக்கொண்டு வந்தது என்மீது குற்றம்தான்.'' இவ்விதம் கூறிவிட்டு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள். ஸ்வர்ணலதா சிலைபோல் நின்றுகொண்டிருந்தாள். ''அவர் உன்னை நேசிக்கிறார்'' என்று பாக்யதாரா கூறியது அவள் செவியில் ரீங்காரம் செய்துகொண்டிருந்தது. தன் துணிமணிகளைப் பெட்டியில் எடுத்து வைத்தாள். நீர் மல்கிய கண்களுடன் பெட்டியைக் கையில் எடுத்துக்கொண்டு அக்காவின்



வீட்டை விட்டு வெளியேறினாள் ஸ்வர்ணலதா.

மறுநாள் காலையில் ஹரன் ஊரிலிருந்து திரும்பிவந்தான். குளித்துவிட்டு போஜனமருந்த உட்கார்ந்தான். பாக்யதாரா பரிமாறினாள். 'ஸ்வர்ணலதா எங்கே?'' என்றான் ஹரன்.

''ஸ்வர்ணலதா பரிமாறுவிட்டால் சாப்பாடு உள்ளே செல்லாதா?' என்றாள் பாக்யதாரா கேலியும், ஏளனமும் நிறைந்த பார்வையுடன். பாக்யதாராவின் இந்தப் புதுவிதமானபோக்கு ஹரிஹரனுக்கு ஆச்சர்யத்தைக்கொடுத்தது. ''ஏன் தாரா! உனக்கு உடம்பு ஸௌகரியமில்லையா?'' என்றான். பாக்யதாரா ''இன்றுதான் என் தேக நிலைமையைப்பற்றி விசாரிக்க வேண்டும் போல் தோன்றியதாக்கும். எனக்கு உடம்புஒன்றுமில்லை, ஸ்வர்ணு ஹாஸ்டலுக்குப் போய் விட்டாள்'' என்று வெறுப்பு ஒலிக்கும் த்வனியில் கூறினாள். ஹரனும் விஷயத்தை ஒருவாறு புரிந்துகொண்டான் ''அந்தக் கள்ளம், கபடு அற்ற சிறுமியின் உள்ளத்தைப் புண்ணாக்கிவிட்டாயே'' என்று மனைவியைக் கடிந்துகொண்டான் ஹரிஹரன். ஸ்வர்ணலதா சென்ற பிறகு ஹரிஹரன் பித்துப் பிடித்தவன் போலாகிவிட்டான். வர வர அவனுடைய சிற்பங்களில் பாவம் குறைந்து வந்தது. மறுபடியும் அவன் கண்கள் 'அழகு, அழகு என்று அழகைத் தேடி அலைந்தன.

ஸ்வர்ணலதா ஹாஸ்டல் மாடியில் உட்கார்ந்துகொண்டு கருங் கடலை நோக்கியவாறு சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். அன்று பாக்யதாரா, 'ஸ்வர்ணம், நீ அவரைக் காதலிக்கவில்லை என்று எந்தக் கோயிலிலும் சத்தியம் செய்வாயா?'' என்று கேட்டது இன்றும் அவள் செவியில் ஒலித்தது. அதற்கு முன் நிர்மலமான ஹ்ருதயத்துடன் சங்கோஜமில்லாமல் ஹரனுடன் பழகின ஸ்வர்ணலதாவின் மனதில், இப்பொழுது மாசு படிந்து விட்டதாக எண்ணினாள். அடிக்கடி ஹரனின் நினைவு அவளைத் துன்புறுத்திற்று. ''சீ, இதென்ன நினைவு! ஒரு வேளை எல்லாரும் காதல், காதல் என்று சொல்கிறார்களே! அதுதானா இது? சிச்சீ, காதலாம், கத்திரிக்காயாம். காதல் என்ற பதம் கதாஆசிரியர்கள் கதைகளைப் பக்கம் பக்கமாக வரைந்து தள்ளுவதற்காகவும், கவிஞர்கள் பொழுது போவதற்காகவும் வர்ணிக்கும் சொற்கள்.'' என்று மனதைக் கட்டுப்படுத்திக்கொள்ள முயன்றாள். ஆனால், மனக் குரங்கு அவளுக்கு அடங்கவில்லை. பாக்யதாராவால் கூறப்பட்ட அந்தச் சுடு சொற்களே ஸ்வர்ணலதாவின் மனதில் ஒருபுது கிளர்ச்சியை உண்டாக்கி, அவளது துள்ளிய ஹ்ருதயத்தை மாறுபடச் செய்தன. அந்தச் சொற்களே அவள் மனதில் காதல் விதையை ஊன்றுவதற்கு ஹேதுவாக இருந்தது. ஹரனை அவள் தன் ஹ்ருதயத்தில்வைத்து பூஜிக்கலானாள். அவனுடைய நாமத்தை அவள் ஸ்மரணை செய்யலானாள், அதில் அவள் எல்லையற்ற இன்பம் இருப்பதாகக் கண்டாள். அவளுக்கு வர வர ஹாஸ்டல் வாஸம் வெறுப்பை அளித்தது. தன் சகோதரிக்குத்தான் துரோக சிந்தனை செய்துகொண்டிருப்பதையும் அவள் உணரவில்லை. ஹரனைப் பார்க்கதுடித்தாள். ஆனால் லஜ்ஜை ஒன்று அவளைத் தடை செய்தது. திடீரென்று யாரோ 'ஸ்வர்ணலதா' என்று கூப்பிடுவதுபோல் தோன்றிற்று. ஸ்வர்ணலதா துள்ளிக் குதித்து எழுந்தாள். நாலாபுறமும் கண்களைச் சுழற்றி நோக்கினாள். 'ஆம்: எனது ஹ்ருதய தேவரின் இனிய குரல்தான் அது. ஐயோ, அவருடைய உருவம் கண்களுக்குப் புலப்படவில்லையே' என்று கலங்கினாள். மறுபடியும் அந்தக் குரல் கேட்டது. ''ஹே, ஸ்வர்ணலதா! ஸௌந்தர்ய தேவதையே! உன் கடாக்ஷமில்லாவிட்டால் என் சிற்பங்கள் எவ்விதம் சோபிக்கும்? நீ என் தேவதை; நான் உன் தாஸன். ஸ்வர்ணலதா! நீ என் இல்லத்திற்குத் திரும்பி வா! உன் சகோதரிதான் கூறிய கடும் சொல்லை நினைத்துப் பச்சாதாபப்படுகிறாள். ஸ்வர்ணலதா அழகின் அவதாரமே! மோஹன ரூபியே, திரும்பி வா; உன் அக்காவை மன்னித்து விடு.........''

ஸ்வர்ணலதா மாடியிலிருந்து கீழே இறங்கினாள். மழை 'ஜோ' என்று பெய்துகொண்டிருந்ததையும் அவள் உணரவில்லை. இடி சடார் புடார் என்று இடித்துக்கொண்டிருந்தது. மின்னல் 'பளீர், பளீர்' என்று வெட்டிற்று. மாடியிலிருந்து 'தட, தட' என்று இறங்கி வெளியே ஓடினாள். ''ஹரன் ஹரன் எங்கு இருக்கிறீர்கள்? ஹரன், ஹரன், ஹரன்'' என்றவாறு ஓடினாள். 'பளீர்' என்று மின்னல் வெட்டிற்று. 'ஹா' என்றலறினாள் ஸ்வர்ணலதா. ஆம்; மின்னல் அவளுடைய அழகிய கருவிழிகளைப் பறித்துவிட்டது!

அந்த நேரத்தில் ஹரிஹரன் ஸ்வர்ணலதாவின் உருவத்தை வரைந்து கொண்டிருந்தான். எல்லாம் பூர்த்தியாகிவிட்டது. ஆனால், கருவிழிகளை மாத்திரம் வரைய முடியவில்லை. கருவிழிகள் போல் தீட்டப்பட்டிருந்த சாயம் கரைந்து கரைந்து வழிந்தது. ஹரன் திகைத்தான். எவ்வளவு முயன்றும் அந்தக் கருவிழிகளை மாத்திரம் அவனால் வரைய முடியவில்லை. ''இதன் உண்மைக் கார

ணத்தை அறிய வேண்டும். பாக்கியதாரா! ஸ்வர்ணாவுக்கு ஏதோ விபத்து நேர்ந்துவிட்டதுபோல் தோன்றுகிறது. புறப்படு, ஹாஸ்டலுக்குப் போகலாம்' என்றான் ஹரிஹரன்.

பாக்கியதாராவும், ஹரிஹரனும் ஹாஸ்டலை அடைந்து, ஸ்வர்ணாவின் விடுதிக்குள் நுழைந்தார்கள். அவளைக் கண்டதும் இருவரும் "ஹா" என்றலறிவிட்டார்கள். "கண்ணே, ஸ்வர்ணம் நீ எப்படிக் கண்களை இழந்தாய், என்று ஸ்வர்ணாவை அணைத்துக்கொண்டு பாக்யதாரா அழுதுவிட்டாள். ஸ்வர்ணலதாவின் வெள்ளை விழிகளிலிருந்து கண்ணீர் வடிந்தது. ஸ்வர்ணலதா அவள் பாதங்களில் வீழ்ந்து "அக்கா, இந்தத் துரோகிக்கு ஏற்ற தண்டனைதான் இது! என்னை மன்னித்துவிடு அக்கா!" என்று கதறினாள். பாக்யதாரா அவளை சாந்தப்படுத்தி, விஷயங்களை அறிந்துகொண்டாள். அவள் ஹ்ருதயம் கொதிப்படைந்து தணிந்தது. ஆழ்ந்து யோசித்து, கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தாள். "கண்களை இழந்த இந்தப் பெண்ணை எவன் மணப்பான்? என் சகோதரியின் நன்மைக்காக என் நாதரை அவளுக்கு த்யாகம் செய்துவிடுகிறேன். இது என் கடமை" என்று தனக்குள் கூறிக்கொண்டவாறு ஸ்வர்ணலதாவின் கரத்தை எடுத்து தன் பதியின் கரத்தில் வைத்து, 'இவளைக் காப்பது தங்கள் கடமை' என்று கண்களில் நீர் முட்ட கூறினாள். ஹரனும் ஸ்வர்ணலதாவை சமுத்திர ராஜனும், சந்திரனும் சாக்ஷியாக ஏற்றுக்கொண்டான்,

பாக்யதாரா ஹரனையும், அவன் புது மனைவியையும் பார்த்து "நாம் படகில் சற்று தூரம் உல்லாசமாகப் போய் வரலாம் வருகிறீர்களா?" என்றாள். இருவரும் அதற்கு இணங்கினர். மூவரும் படகில் ஏறிக்கொண்டனர். பாக்யதாரா துடுப்பைப் பிடித்து படகை தள்ளினாள். கொந்தளிக்கும் கடலைப் போல் அவள் உள்ளமும் கொந்தளித்துக்கொண்டிருந்தது. கண்களை இழந்த ஸ்வர்ணலதா சலனமற்றும் படகில் படுத்துக்கொண்டிருந்தாள். ஸ்வர்ணலதாவின் திவ்ய ஸௌந்தர்யத்தில் தவிர்க்க முடியாத குறை ஏற்பட்டுவிட்டது. அவளுடைய அழகின் சோபை குன்றிவிட்டது. ஹரனின் மனதில்



காலஞ் சென்ற ஸ்ரீ புலாபாய் தேசாயின் உடல் தகன கிரியைக்காக ஊர்வலமாக கொண்டு செல்லப்படுகிறது.

இருள் சூழ்ந்துகொண்டது. ஸ்வர்ணலதாவின் சந்திர பிம்பத்தில் களங்கம் உண்டாகிவிட்டதால் கலைப்பித்தனான ஹரனால் அவளது 'குறை' பட்ட அழகை ரஸிக்க முடியவில்லை. மறுபடியும் அவனது கண்கள் பரிபூர்ண அழகைக் காண ஏங்கி, அந்தத் தாபத்தால் துடித்தது. கண்களை இழந்த ஸ்வர்ணலதாவின் பரிதாப நிலைமையைக் கண்டு சகிக்காமல் அவளை மணந்தானேயன்றி பூர்ண விருப்பத்துடன் அவளை ஹரன் மணக்கவில்லை. கண்களை இழந்ததைப்பற்றி ஸ்வர்ணலதா துயரப்படவில்லை. அதன் காரணத்தால்தான் தன் காதலனை அடைய முடிந்தது, என்று ஆனந்த சாகரத்தில் மூழ்கினாள். அவள் வாய் தன் பதியின் நாமத்தை ஜபித்துக்கொண்டிருந்தது. அவள் உள்ளம் ப்ரேமை பதியை நினைத்து மகிழ்ந்தது. இவ்விதம் மூவருடைய மனமும் மூன்று வகையில் சென்றுகொண்டிருந்தது.

எனக்குச் சிரமமாக இருக்கிறது. நீங்கள் சற்று படகைத் தள்ளுகிறீர்களா? என்றாள் பாக்யதாரா. ஹரன் அவள் கரங்களிலிருந்து துடுப்பை வாங்கிப் படகைத் தள்ளினான். பாக்யதாரா அவனுக்குப் பின்புறம் நின்றுகொண்டிருந்தாள். ஒரு கடிதத் துண்டை ஸ்வர்ணலதாவின் அருகில் எறிந்துவிட்டு, படகின் விளிம்பில் லேசாக உட்கார்ந்தாள். ஹரன் அறியாமல் மெள்ள, மெள்ளச், சரிந்து ஜலத்தில் வீழ்ந்தாள் பாக்கியதாரா.

அவளது கொதிக்கும் உடலும், உள்ளமும் குளிர்ந்தன. அந்தக் கடிதத் துண்டில்,

எந்த ஸ்திரீயும் முழு மனதுடன் தன் பதி வேறொரு மங்கையுடன் வாழ்வதை சகிக்கமாட்டாள். ஒவ்வொரு ஹிந்து பெண்களும் தன் பதியின் ஸுகத்திற்காக எதையும் தியாகம் செய்யப் பின்வாங்கமாட்டாள். தன் பதி சந்தோஷமாக இருப்பது ஒன்றுதான் ஹிந்து லக்ஷியங்கள். தங்கள் சிற்பகலையும் முன்னுக்கு வர ஸ்வர்ணாவின் அழகு தூண்டு கோலாக இருக்கும். உங்கள் நலத்திற்காகவும், ஒரு சகோதரியின் ஆதரவுக்காகவும் என்னை சமுத்திர ராஜனுக்கு அர்ப்பணம் செய்கிறேன்" என்று எழுதியிருந்தது. ஹரிஹரன் படகைத் தள்ளிக்கொண்டே இருந்தான். பாக்யதாரா இயற்கை அன்னையுடன் ஒன்றாகக் கலந்துவிட்டதை அவன் அப்பாவி உள்ளம் அறியவில்லை. "அழகு, அழகு, அழகெங்கே?" என்று அவன் உள்ளம் இரைந்தது. ஒரு மலரில் தேன் குறைந்தவுடன் வேறொரு மலரை நாடிச்செல்லும் வண்டினங்களைப் போன்றது சிற்பியின் உள்ளம். ஆம். அழகு எங்கு இருக்கிறதோ அங்குதான் அவன் உள்ளமும், உயிரும் இருக்கின்றன. ஆனால். சிற்பிகளின் வாழ்க்கை அமைதியற்றது! அமைதியற்று ஓடிக்கொண்டே இருக்கும் நதியை போன்றது அவர்கள் உள்ளம்!

# ஸ்ரீ பூச்சி ஐயங்கார் ஜாவளிகள்

(ஸ்ரீ அரியக்குடி ராமானுஜய்யங்கார் ஸ்வரப்படுத்தியது)

### பல்லவி

நீதபமான ஸாமிநீநா நிலயமுனத ரம்மனவே (நீநப)

### அனுபல்லவி

3
மருபுல்யாக நாமனவினி மதவ வானிதோ மனஸுஞ்சி தெல்பி (நீநப)

### சரணங்கள்

3 3 3 3
ஸதயுடத நா ஸாமிகெஸரி ஸாடியுலே தனுசுத்ஸால

3 2 3
முதமுதோனு முக விலாஸ முனு ஜூசின முந்தி த்ஸூடத (நீநப)

4 3
மதுரிபுடத ஸ்ரீனிவாஸுனி மனஸுதெலிசி ரேபுமாபு

3 4 3
நீதரல்யாக நாமனவினி நீதுவனமுனு ஜேயுடகிடு (நீநப)



**ராகம் : பெஹாக்** — **தாளம் : ரூபகம்**

ஆ: ஸகமபநிதநிஸ் — அ: ஸ்நிநிதபம கமகரிஸ.

+ இந்த அடையாளம் பிரதிமத்யமம், கைசிகி நிஷாதம் இவைகளைக் குறிக்கின்றது.

### பல்லவி

; — கம பா பப மம கா | ரிக மக ரிஸ ரிஸ ஸா ; | ; நிஸா க கம பா பா | பத நித தப மா மக கரி ||
நிருப மா . . . ன | ஸா . . மி . நி நா | நில யமு . ன கு | ரம் . . . ம . ன வே . . . ||

2. கா மா பா, நிதா பம மா கா | | ; நிஸ ஸககம பா பா | பத நிஸ் நித பா பம கரி ||
நி ரு ப . . மா . . ன | ஸாமி நி நா | நிலய . மு . ன கு | ரம் . . . ம . ன வே . . . ||

3. கா மா பா, தநித பம மா கா | | நிஸ கம பா கம பநி ஸ்ா | ஸ்ரி க்ாம்க் ரிஸ் நித பம கரி ||
நி ரு ப . . . மா . . ன | ஸாமிநிநா | நி . ல . ய மு . ன . கு | ரம் . . . . ம . ன . வே . . . ||

4. கா மா பஸ்நி நிதபமக | கரி பம கரி ஸநி ஸா ; | ரிஸ் நி தபா ஸா ஸா ஸா | கம பத பத மப மக மரி ||
நி ரு ப . . மா . . ன . | ஸா . . . மி . நி . நா | நி . ல . ய மு ன கு | ரம் . . . ம . ன . வே . . . ||
(நிருப—4)

### அநுபல்லவி

; மக மா பா ஸ்தநீ | ஸ்ா ; ஸ்ா ஸ்ா ஸ்ா ஸ்ா | 2. ரிஸ் நித பா பா ஸ்தநீ | ஸ்ா ; ஸ்ா ஸ்ா ஸ்ா ஸ்ா ||
மருபுல் யா . . க | நா ம ன வி னி | ம . ரு . புல் யா . . க | நா ம ன வி னி ||

3. ரிஸ் நித பா ஸ்தநீ ஸ்ா | நிஸ் ரிக் ம்க் ரிக் ம்க் ரிஸ் ஸ்ா | ஸ்நி ரிஸ் ஸ்நி நித தப பா பம | பநி தநி தப பப மக மரி ||
ம . ரு . புல் யா . . க | நா . . . ம . ன . . . வி . னி | ம . கு . வ . வா . னி . தோ. | ம . ன . ஸஞ்சி. தெல்பி. ||
(நிருப—4)

### சரணம்

தநி ஸ்ா ஸ்ா நித பமபா | நித ரிஸ் ஸ்நி நித பம தப பா | ; கக ம பநித தபமக | கரி பம கரி ஸா ; ஸா ||
ஸ. த யு . ட . கு . நா | ஸா . . . மி கெ . ஸ . ரி . . | . . ஸா . டி யு . லே . . . | த . னு . சு . த்ஸா ல ||
; ஸ்நீ தபா பா ஸ்தநீ | ஸ்ா ஸ்ா ஸ்ா ஸ்ா : ஸ்ா | 2. ரிஸ் நித பா பா நிதநீ | ஸ்ா ஸ்ா ஸ்ா ஸ்ா ; ஸ்ா ||
முகமு . தோ . . னு | மு . க வி லா ஸ | மு . க . மு தோ . . னு | மு க வி லா ஸ ||

3. ரிஸ் நித பா ஸ்தநீ ஸ்ா | நிஸ் ரிக்ம்க் ரிக்ம்க் ரிஸ் ஸ்ா ஸ்ா | ஸ்நி ரிஸ் ஸ்நி நித தப பா பம | பநி தநி பத பப மக மரி ||
மு . க . மு தோ . . னு | மு . க . வி . லா . . . . . . . . ஸ | மு . னு . ஜ . . சி : . ன . | முக் . . . தி . த்ஸ டகு ||
(நிருப—4)

அடுத்த சரணமும் இதுபோலவே.

# மஹாபாரத ஸாரம்

## 31

## ஜராஸந்த வதம்

“ராஜசூய வேள்விக்கு நீர் தகுதியுள்ளவர்தான். ஆனால், திக் விஜயம் செய்து அரசர்களையெல்லாம் ஜயித்தால் அல்லவா நீர் ஸம்ராட் பட்டம் பெறமுடியும்? சரி, எந்த அரசனை ஜயித்தாலும், ஜராஸந்தன் என்ற அந்தப் பகை அரசனை ஜயிக்க வேண்டாமா?” என்று சொன்னார் கண்ணபிரான். உடனே பாண்டவர்களெல்லாம் ‘ஜராஸந்தனை எப்படி வெல்வது?’ என்பது குறித்து ஆலோசித்துப் பார்த்தார்கள்.

### கண்ணன் தந்திரம்

அப்போது கிருஷ்ணபகவான் அவர்களை நோக்கி, “யாதவர்களாகிய நாங்கள் ஜராஸந்தனை எதிர்க்க முடியாமல்தான் ஊரை விட்டுப் போகிற ஆலோசனையைச் செய்தோம். பதினெட்டு முறை யுத்தம் செய்து பார்த்தும், அந்த மகா பலசாலியைக் கொல்ல முடியவில்லையே. உங்களிடத்திலும் வீணான கௌரவம் பாராட்ட வேண்டுமா? ஜராஸந்த பயம் தனக்கு இல்லை என்று எந்த யாதவ வீரன்தான் நெஞ்சிலே கை வைத்துச் சொல்லமுடியும்? இப்படியெல்லாமிருக்க உம்முடன் இருந்து ராஜசூய யாகம் செய்வித்து உமக்கு ஸம்ராட் பட்டமும் கொடுத்துவிட்டால், ஜராஸந்தன் என்னைச் சும்மா விட்டு வைப்பானா?” என்று பயந்தவரைப்போல் பேசினார். பிறகு, ஜராஸந்தனே ராஜசூய யாகம் செய்ய விரும்பிப் பல அரசர்களையும் வென்று சிறைப்படுத்தியிருப்பதாகவும் கிருஷ்ணன் சொன்னார். ஆகவே, ஜராஸந்தனை வதஞ் செய்து அந்த அரசர்களை விடுவிக்காமல் ராஜசூயத்தைக் குறித்து நினைப்பது வீணானபகற்கனவுதான் என்றார்.

“அப்படியானால் எனக்கு ஸாம்ராஜ்யமும் வேண்டாம். ஸம்ராட் பட்டமும் வேண்டாம்; துஷ்ட ஜராஸந்தனுடைய வழிக்குப்போகவே வேண்டாம்! நாரதரைச் சண்டைக்காரர் என்கிறார்கள்; நான் நம்பாமலிருந்தேன். அவர் ஜராஸந்தனோடு சண்டையை மூட்டிவிடத்தான் ராஜசூய யாகத்தைப் பிரஸ்தாபித்தார் என்று இப்போது தோன்றுகிறது. கண்ணபிரானே அஞ்சும்போது, நாங்கள் என்ன செய்ய முடியும்?” என்று தர்மபுத்திரர் சொல்லிவிட்டார்.

உடனே கண்ணபிரான் பீமனை நோக்கி, “உன் தமையனார் சொல்வதுதான் எனக்கும் பொருத்தமாய்த் தோன்றுகிறது. ‘கிட்டாதாயின் வெட்டென மற!’ சரிதானே?” என்று புன்னகை புரிந்தார். பீமனுக்கோ ஆத்திரம் பொறுக்க முடியவில்லை. “கண்ணா! உம்முடைய உபாயமும், என்னுடைய பலமும் சேர்ந்தால் ஜராஸந்தனை முடிப்பதும் அரிதாகுமோ? நீர் இருக்கும்போது எங்களுக்கு எங்கும் ஜயம், எப்போதும ஜயம்தான்!” என்றான்.

பிறகு ஜராஸந்த வதமே முதற் காரியம் என்று அவர்கள் தீர்மானித்தார்கள். அச்சமயம், ஜராஸந்தன் எண்பத்தாறு ராஜாக்களைச் சிறை வைத்திருப்பதாகவும், இன்னும் பதினால்வர் சிறைப்பட்ட பின் அந்த நூறு அரசர்களையும் பலி கொடுக்கப் போவதாகவும் செய்தி வந்தது. அது கேட்ட அர்ஜுனன், “அந்தப் பலியை நாம்ஏன் தடுத்துஉலகமெல்லாம் வியாபிக்கும் புகழைப் பெறலாகாது?” என்று கேட்டான்.

அப்பால் கண்ணனும் பீமார்ஜுனர்களும் தர்மரிடம் விடை பெற்றுக்கொண்டு ஜராஸந்தனது மகத ராஜதானியை நோக்கிப் புறப்பட்டார்கள். அவர்கள் பிராம்மண வேஷம் பூண்டு சென்றார்கள். காடுகளையும் நாடுகளையும் ஆறுகளையும் குன்றுகளையும் தாண்டி அந்த அழகிய நகரத்தை அடைந்தார்கள்.

### பேச்சும் ஏச்சும்

கிருஷ்ண பீமார்ஜுனர்கள் ஜராஸந்தனுடைய அரண்மனைக்குள் புகுந்ததும், அவன் அவர்களை எதிர்கொண்டழைத்து நல்வரவு கூறினான். ஆனால், அவர்களைக் கவனித்துப் பார்த்ததும் உள்ளத்திலே அவனுக்குச் சந்தேகம் தோன்றியது. ‘தர்ப்பை பிடிக்கும் கையாகத் தெரியவில்லையே; வில்நாண் உரைந்த காய்ப்பு இருக்கிறதே!’ என்று சிந்தித்து, “உண்மையைச் சொல்லுங்கள்; நீங்கள் யார்? இங்கே ஏன் வந்தீர்கள்?” என்று அதட்டினான்.

அந்தக் கேள்விக்கு நேரடியாகப் பதில் சொல்லாமலே கிருஷ்ணன், “நீ ஏன் அரசர்களைக் கைதியாக்கிப் பலியிட வேண்டும்? தர்மத்தை ரட்சிக்கவே இப்போது நாங்கள் இங்கு வந்திருக்கிறோம்” என்று சொன்னார். ஜராஸந்தனுக்கு உடனே விஷயம் புரிந்துவிட்டது. “கள்ளக் கிருஷ்ணனா நீ? எனக்குப் பயந்து ஓடினவன்தானே! வந்துவிட்டாயா எமலோகத்துக்கு? நின்று சண்டை செய்யத் தெரியுமா? ஓடிப்போ

மாடு மேய்க்க!" என்று கர்ஜித்தான்.

"ஜராஸந்தா! வீணாகக் கர்ஜிக்கிறாய்! இந்தப் பீமசேனனும், அர்ஜுனனும், நானும் உன்னை மகத ராஜ்யத்திலிருந்து எமராஜதானிக்கு அனுப்பவே வந்திருக்கிறோம்! சிறையிலிருப்பவர்களை விடுதலை செய்தால், உன்னை மன்னித்து விடுவோம்" என்று கிருஷ்ணன் சொன்னார்.

ஜராஸந்தன் சிரித்துக்கொண்டு, "உங்களை இப்போதே வதஞ் செய்யப் போகிறேன். நீங்கள் மூவரும் சேர்ந்து வேணுமானாலும் வந்து பாருங்கள் நான் என் போர் வீரர்களை அழையாமல் தன்னந்தனியனாகவே உங்களை எமலோகத்தில் குடியேற்றுவேன்!" என்று கூச்சலிட்டான்.

சண்டை

பீமசேனன் ஜராஸந்தனோடு ஒருவனாவே கைச் சண்டை செய்ய முன் வந்தான். ஜராஸந்தனும் சந்தோஷித்து, "கண்ணன் ஏற்கெனவே தோற்றவன்; அர்ஜுனனோ சிறுவன்! தடிக்கம்பும் கையுமாக நிற்கும் பீமா! இதோ உன் கொழுப்பைக் கரைத்து உயிரைக் குடித்து விடுகிறேன்!" என்று தோள் கொட்டினான்.

கரைபுரண்டு வரும் இரண்டு கடல்கள் போல் இருவரும் ஒருவரை ஒருவர் எதிர்த்து வந்தார்கள். ஜராஸந்தன் கையில் ஆயுதமில்லாததால், பீமனும் கதாயுதத்தைப் போட்டுவிட்டுக் கைச் சண்டைக்கு ஆயத்தமானான்.

ஒருவர்க்கொருவர் முதலில் கை பிடித்துப் பிறகு பாதவந்தனம் செய்து, அடிக்கைகளினால் விலாப்புறங்களைத் தட்டிக்கொண்டனர். பிறகு இரு கைகளாலும் பல முறை தோள் தட்டி ஒருவரையொருவர் இடித்துக்கொண்டார்கள். கழுத்திலும் கன்னத்திலும் அடிகள் பலமாக விழுந்தன.



அப்பால் ஒருவரையொருவர் உதைத்து, மார்பிலும் ஒருவரையொருவர் கையால் அறைந்துகொண்டார்கள். ஒருவரையொருவர் இழுத்து இழுத்து இப்படியெல்லாம் கைச் சண்டை போட்டுக்கொண்டிருக்கும்போது, களைத்துப் போகும் சமயத்தை எதிர்பார்க்கத் தொடங்கினார்கள்.

நீண்ட இப்போருக்குப் பின் ஜராஸந்தன் களைப்புற்றிருந்த சமயம் பார்த்துக் கிருஷ்ணன் பீமனை உத்ஸாகப்படுத்தினார்.

உடனே பீமன் ஜராஸந்தனைத் தூக்கிச் சுழற்றி அடித்துக் கொன்றுவிட்டான்.

அப்பால் கண்ணனும், பீமார்ஜுனர்களும் சிறையிலிருந்த அரசர்களை விடுவித்தார்கள். ஜராஸந்தனுடைய மகனுக்கு ராஜ்யாபிஷேகம் செய்வித்து இந்திரப்பிரஸ்தம் சென்றார்கள். சென்று, தர்மரை நோக்கிக் கண்ணபிரான், "இனிக் கவலையற்று ராஜசூயம் செய்வீர்" என்றார்.

# பலியாத ஜோஸ்யம்

 ஸி. ஆர். ராஜம்மா 

தனது உடைகளை எடுத்துப் பெட்டியில் வைத்துக் கொண்டிருந்த வாசுவின் மனம் எங்கேயோ சென்று தத்தளித்துக் கொண்டிருந்தது பரீட்சை முடிந்து தன் ஊருக்குக் கிளம்பிக் கொண்டிருந்தானவன்.

தாய் தந்தையரைப் பார்க்க ஆசையிருக்கத்தானே செய்யும். ஆனால், வாசுவின் உள்ளம் அதையெல்லாம் நினைத்துச் சந்தோஷமடையவில்லை கிராமத்திலிருக்கும் முரட்டுச் சுபாவமுள்ள தகப்பனாருக்குப் பணிந்து அங்கே போய் இருக்க வேண்டுமா என்ன? பிறகு யாருக்காக அவ்வளவு சந்தோஷம்? அதற்குக் காரணம் இருக்கத்தான் செய்தது.

படிப்பிற்காக சென்னைக்கு அவன் புறப்படும்போது கோவ்வை இதழ்களில் குறு நகை தோன்ற வழியனுப்பிய கமலி அங்கேதான் இருக்கிறாள். அவளைப் பார்க்கப் போவதில், இல்லை, அவளைத் தன்னுடைய வாழ்க்கைத் துணைவியாக்கிக்கொள்வதில் அவனுக்குச் சந்தோஷம் இல்லாமலா இருக்கும்.

கமலி, வாசுவின் அத்தை மகள். சிறு வயதிலேயே தாய் தந்தையற்ற அவன் தன் மாமன் வீட்டிலேயே வளர்ந்து வந்தாள். இளம் வயது முதல் வாசுவும் கமலியும் மிக்க அன்னியோன்யமாயிருந்தார்கள். நாளடைவில் இவர்களது சிநேகம் காதல் பலரானதில் ஆச்சர்யம் ஒன்றும் இல்லை.

வாசுவின் தந்தையிடமிருந்து உடனே ஊருக்கு வரும்படியும், கமலிக்குக் கல்யாணமென்றும் வந்த கடிதத்தைப் பார்த்துத்தான் வாசு இவ்வளவு ஆனந்தமாயிருந்தான்.

சிறு வயதிலிருந்தே அவன் தாய் அவனைக் கேலி செய்வாள். 'என்னடா இப்பொழுதே இந்தமாதிரி அவளிடம் பிரியமாயிருக்கிறாயே. நாளைக்குக் கல்யாணமாகிவிட்டால் அப்பா, அம்மா நினைவுகூட இருக்காதுபோலிருக்கே உனக்கு' என்பாள்.

ஊரில் அவன் சிநேகிதர்கள் அவனைக் கேலி செய்யும்போது அவன் மனதில் சந்தோஷ வெள்ளம் கரை புரண்டு ஓடும். இப்போது அந்த நாள் நெருங்கி வந்து கொண்டிருக்கிறது.

சென்னையிலிருந்து புறப்பட்ட ரயில் சந்தோஷத்தால் நிறைந்திருந்த வாசுவைச் சுமந்துகொண்டு சென்றது அவன் மனம் கற்பனைக் கோட்டைகளைக் கட்டியது. பல பேர் முன்னிலையில் கமலியின் கையைப் பிடித்து நிற்கிறான் வாசு. கமலியின் கமலக் கண்கள் அடிக்கடி அவனைக் கனவுலகில் சஞ்சரிக்கச் செய்கிறது. அப்பா, அதிலே தான் குறும்புத்தனம் எவ்வளவு என்று சொல்ல முடியுமா?

கள்ளிப்பட்டி ஸ்டேஷனில் ரயில் அவன் கற்பனையைக் கலைத்தது. ஸ்டேஷனில் வில் வண்டி வந்து காத்துக்கொண்டிருந்தது, வண்டிக்கார முனியன் அவனுக்கு ஒரு கும்பிடுபோட்டுவிட்டு சாமான்களையெல்லாம் எடுத்து வண்டியில் வைத்தான். சிறு வயதில் தானும் கமலியும் அந்த வண்டியில் பள்ளிக்கூடம் போனது, அப்போது முனியன் வண்டியை ஓட்டிக்கொண்டே கதைகள் சொன்னது எல்லாம் வாசுவுக்கு இப்பொழுதுபோல் நினைவுக்கு வந்தது.

வண்டி வீட்டு வாசலில் போய் நின்றது. வாசு வண்டியிலிருந்து இறங்கி உள்ளே சென்று பெற்றோரை நமஸ்கரித்தான். அன்புடன் அவனை வரவேற்றாள் தாயார்.

வாசலில் கலியாணத்திற்காக பந்தல் போட்டுக்கொண்டிருந்த ஆட்களைக் கவனிக்கப் போய்விட்டார் தந்தை. அவர் எப்பொழுதும் இப்படித்தான். ஓரிரண்டு வார்த்தை பேசிவிட்டுத் தன் காரியத்தைக் கவனிக்கப் போய்விடுவார். அவர் சுபாவம் அது.

களைப்புடன் வந்த வாசுவுக்கு அவன் தாய் நல்ல சாப்பாடு போட்டாள். சாப்பிட்டுவிட்டு ஊஞ்சலில் உட்கார்ந்தான். பக்கத்தில் வந்து நின்ற தாய் ஏதேதோ விஷயங்களைப் பற்றி விசாரித்துக் கொண்டிருந்தாள் பிள்ளையிடம். அவன் கண்கள் சமையலறைப் பக்கம் எதையோ தேடிக்கொண்டிருந்தது. அவன் தேடும் பொருள் கண்களுக்குத் தென்படவேயில்லை. அப்பா! இந்தப் பெண்களே பொல்லாதவர்கள். ஒருதரமாவது வந்து நின்றுவிட்டுப் போகிறாளா பார் என்று நினைத்து ஆத்திரப்பட்டான் வாசு.

அடுத்த நிமிஷமே ஆத்திரமெல்லாம் மாறி அன்பு வெள்ளம் ஊற்றெடுத்தது அவன் உள்ளத்தில். கல்யாணமென்றால் வெட்கமிருக்காதா என்ன என்று நினைத்துக் கொண்டானவன்.

'வாசு, கமலிக்குக் கல்யாணம் எப்பொழுது என்று கேட்கவில்லையே நீ' என்றாள் தாயார். வாசு அன்னையைப் பார்த்தான். அவன் கண்களில் ஆர்வம் நிறைந்திருந்தது ஊஞ்சலில் தன் பிள்ளையின் அருகில் உட்கார்ந்துகொண்டு சொன்னாள் அவள். "உன் ஜாதகத்தையும் கமலியின் ஜாதகத்தையும் நம்ம ஊர் அப்பு தீக்ஷிதரிடம் காண்பித்ததும் கமலிக்குப் புத்திர பாக்கியமே இல்லையாம். அவளுக்கு இந்த ஜன்மத்தில் குழந்தையே பிறக்காதென்று நிச்சயமாய்ச் சொல்லிவிட்டார் அவர். அவர் சொன்னால் சொன்னபடிதானென்று உனக்குத் தெரியுமே. அதனாலே, அப்பா நம்ம குடும்பத்திற்கு நீ ஒருவன்தான். உனக்கு இரண்டு குழந்தைகள் பிறந்துதான் நம்ம வம்சம் செழிக்கணும் என்று அவளுக்கு வேறு வரன் பார்த்துவிட்டார். என்ன செய்யறது. அவளுக்கு நம்மாத்திலே வாழ்க்கைப்பட யோகமில்லை. அவ்வளவுதான்" என்று முற்றுப் புள்ளி வைத்தாள்.

வாசுவின் தலையில் மலை புரண்டு விழுந்ததுபோலிருந்தது. இவ்வளவு நாளாகக் கட்டிய மனக் கோட்டை ஒரே நிமிஷத்தில் தூள் தூளாகிவிட்டது. கண்களில் நீர் தளும்ப, பரிதாப முகத்துடன் பார்த்தான் அன்னையை.

"ஏண்டா பச்சைக் குழந்தை மாதிரி இருக்கிறாயே நீ. கமலி நல்ல இடத்தில்தான் வாழ்க்கைப்படுகிறாள். பிள்ளையும் தங்கமான குணமுள்ளவன். மூத்தாளிலே இரண்டு பெண் குழந்தைகள் இருக்கு. ஆஸ்தியுமிருக்கு. அவளுக்கு ஒரு குறைவுமில்லை. நாளைக்கு அவர்களெல்லோ

ரும் வருவார்கள். நீயே பாரேன். உனக்கும் நல்ல இடத்தில் பெண் பார்த்துக்கொண்டிருக்கா உங்க அப்பா. இதுக்கெல்லாம் வருத்தப் படுவாளாடா" என்ற அம்மாவின் வார்த்தைகள் நொந்த புண்ணில் கோலிட்டதுபோல் வேதனை அளித்தது அவனுக்கு.

அப்பு தீக்ஷிதர்மேல் அவனுக்கு ஆத்திரமாய் வந்தது. தன் வாழ்க்கைக்கு எமனாக வந்த அவரை அப்படியே அடித்துப் போட்டுவிட வேண்டும் போலிருந்தது. எப்படியாவது கமலியைத் தானே கலியாணம் செய்துகொள்ள வேண்டும். அப்பா சம்மதியாவிட்டால் என்ன. கமலியுடன் ஒருவருக்கும் தெரியாமல் எங்காவது போய்விடலாம் என்று எண்ணமிட்டவனாய் மாடிக்குச் சென்றுவிட்டான்.

அன்று இரவு எட்டுமணியிருக்கும் கமலியை வீடெல்லாம் தேடினான் வாசு. கடைசியில் சாமான் அறைக் கதவு திறந்தபோது, அங்கு குப்புறப் படுத்துக்கொண்டு விம்மி அழுதுகொண்டிருந்தாள். கலியாணத்திற்கு வேண்டிய சாமான்கள் நாலா பக்கமும் குவிந்து கிடந்தன. சிறிய குத்துவிளக்கொன்று எரிந்துகொண்டிருந்தது.

கதவைத் திறக்கும் சப்தம் கேட்டுத் தலை நிமிர்ந்து பார்த்தாள் கமலி. வாசுவைக் கண்டதும் ஒரு நிமிஷம் திகைப்படைந்தாள். அடுத்தகணமே கண்களைத் துடைத்துக்கொண்டு, எழுந்து நின்று புன்முறுவல் பூத்தாள் அந்தக்கட்டழகி.

வாசு, அவள் அருகிற் சென்று அவள் மலரை ஒத்த கைகளைப் பற்றித்தன் தீர்மானத்தைச் சொன்னான். அன்றிரவு புறப்படும்படியும் சொன்னான். ஆனால், அவன் எதிர்பார்த்ததைப்போல் அவள் இணங்கவில்லை. அவள் செய்கை அவனுக்கு மிகுந்த ஆச்சர்யத்தை விளைவித்தது.

கமலி அவன் சொல்வதை சாவகாசமாக கேட்டுவிட்டு, கணீரென்ற ஒரு சிரிப்பு சிரித்துச் சொன்னாள். "அண்ணா, ஆமாம். நீ எனக்கு இனிமேல் சகோதரன்தான். என்னை உன் தங்கையாக எண்ணிக்கொள். கடந்த விஷயங்களை மறந்துவிடு. அந்தக் காதல் நாட்களெல்லாம் ஒரு கனவு என்று நினைத்துக்கொள். அண்ணா, நாளை உன் சகோதரிக்குக் கல்யாணம். அதை நீதான் சந்தோஷமாய் நடத்தி வைக்கவேண்டும். அது மட்டும் போதாது. நீ ஒரு அழகான பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டு சந்தோஷமாய் வாழ்க்கை நடத்தவேண்டும். அதுதான் நான் உன்னிடம் கேட்கும் அன்புப் பிச்சை. என்னை நீ சந்தோஷப்படுத்த எண்ணினால், என் வேண்டுகோளை நிராகரிக்க மாட்டாயல்லவா?' என்று சொல்லிக்கொண்டே தன் கையை விடுவித்துக்கொண்டு சென்றுவிட்டாள் கமலி.

சிறிதும் எதிர்பாராத இந்தப் பேரிடி போன்ற வார்த்தைகள் அவனை ஒரு கலக்கு கலக்கிவிட்டது.

கல்யாணத்தன்று வாசுவின் மனம் நிலை கொள்ளாமல் தவித்தது. இந்த துக்கத்தை அனுபவிக்கவா அவன் ஊருக்கு வந்தான். அவன் நினைத்ததென்ன, இப்போது நடப்பதென்ன. கமலிக்குக் கல்யாணமென்று கடிதம் தன் அப்பாவிடமிருந்து வந்தபோது அடைந்த சந்தோஷமெல்லாம் இப்போது வருத்தமாக மாறியதன் காரணம்தானென்ன?

அப்போது கமலியின் கணவனாகத் தன்னை நினைத்துக்கொண்டிருந்தான் வாசு. இப்பொழுதோ அவள் வேறொருவருடைய பொருளாகிவிட்டாள். முன்பின் அறியாத ஒருவருக்கு வாழ்க்கைத்துணைவி ஆகிவிட்டாள். நடந்தவைகளை எண்ணமிட்டுக்கொண்டு படுத்திருந்தான் வாசு. அறைக் கதவு திறக்கப்படும் சப்தம் கேட்டு எழுந்து உட்கார்ந்துகொண்டு திரும்பிப் பார்த்தான்.

கமலி நின்றுகொண்டிருந்தாள். விலையுயர்ந்த பட்டுப்புடவை கட்டிக்கொண்டிருந்தாள். ஏதோ நகைகளும் போட்டுக்கொண்டிருந்தாள். அவள் முகத்தில் எப்பொழுதும் தவழ்ந்துகொண்டிருந்த அந்தக் குறும்புச் சிரிப்பு எங்கே போனதோ தெரியவில்லை. கமலி சிரித்துக்கொண்டே "அண்ணா, நான் போய் வருகிறேன், அவருக்கு ஒரு வாரம்தான் லீவு. அது நாளையோடு முடிகிறது. அவருடன் நானும் போகிறேன். மறந்துவிடாதே. அடிக்கடி கடிதம்போடு' என்று வாசுவை நமஸ்கரித்தாள்.

கமலி சிறிது நேரம் அங்கேயே நின்றுகொண்டிருந்தாள். வாசுவின் பதிலுக்காகத்தான் போலும்; அவன் ஒன்றுமே பேசவில்லை. பிரமை பிடித்தவன்போல் அவளையே பார்த்துக்கொண்டிருந்தான். கமலி அங்கிருந்து சென்றுவிட்டாள். சிறிது நேரத்திற்கெல்லாம் வாசுவின் தந்தையும், கமலியின் கணவரும் வாசுவின் அறைக்கு வந்தார்கள். தனக்கு நாளையோடு லீவுமுடிகிறதென்றும், கமலியுடன் புறப்படுவதாயும், தன் வீட்டில் வந்து சில நாள் தங்கியிருக்க வேண்டுமென்றும் கமலியின் கணவர் கேட்டுக்கொண்டார். வாசு அப்பொழுதுதான் அவரைப் பார்த்தான். கலியாணத்தன்று தலைவலி சுரம் என்று படுத்தவனல்லவா அவன்.

கமலியின் கணவன் நல்ல கட்டுமஸ்தான சரீரத்துடன் இருந்தார். முகத்தில் நல்ல களை. வயது நாற்பதுக்குள்ளிருக்கும். வாசுவிடம் விடைபெற்றுசென்றுவிட்டாரவர். வண்டிமாட்டின் ஜல். ஜல் என்ற சதங்கை சப்தம் தூரத்தில் கேட்டது. வண்டி கண்ணுக்கு மறைந்துவிட்டது.

வருடங்கள் பல சென்றுவிட்டன. அன்று போன கமலியிடமிருந்து யாதொரு கடிதமும் வரவில்லை. இரண்டு மூன்று தடவை கமலியின் மாமா கமலியின் வீட்டிற்குச்சென்றிருந்தார். அவள் சந்தோஷமாய் வாழ்க்கை நடத்துகிறாள் என்று அவர் சொன்னார் வாசுவுக்கு அதிலெல்லாம் அவ்வளவு திருப்தி ஏற்படவில்லை. அவள் சந்தோஷமாய்த்தானிருக்கிறாள். அதனால் அவளுக்கு என்ன? ஒரு உயிர் தனக்காக ஏங்கித் தன் இன்பமான வாழ்க்கையைக் கசப்பாக்கியிருக்கிறதென்று அவள் உணரவில்லை போலும் என்று எண்ணுவான். தன்னிடம் அவளுக்கு உண்மையான அன்பில்லை. அதனால்தான் நான் கூப்பிட்டபோதுவரமறுத்து, வேறு கலியாணம் செய்துகொண்டாள் என்று வாசு சில சமயம் எண்ணுவான்.

வாசு பித்து பிடித்தவன்போல் நாட்களை நடத்தி வந்தான். அவனது அன்பைப் பெறுவதற்காக அவன் மனைவி சந்திராவின் முயற்சியெல்லாம் வீணாயிற்று. சந்திராவை கலியாணம் செய்துகொள்ள அவன் விருப்போ வெறுப்போ கொள்ளவில்லை. அவன் சந்திராவை சரியாகக் கூடப் பார்த்தது இல்லை என்றும் சொல்லிவிடலாம். பொறுமையே பூஷணமாகக் கொண்ட சந்திரா, தன்கணவனின் அசட்டையான செய்கைகளையும், பேச்சுக்களையும் பொறுத்து வந்தாள். கடவுளிடம் அவள் தன் வாழ்க்கையில் இன்பம் தரும்படி

வேண்டிக்கொண்டாள் நாள்தோறும்.

அன்று மாடியில் உட்கார்ந்து ஏதோ புஸ்தகத்தைப் புரட்டிக்கொண்டிருந்தான். படிப்புமுடிந்த பிறகு அவன் வேலைக்காக எங்கேயும் தேடி அலையவில்லை. "நம் கிராமத்தோடு இருந்துகொண்டு நில புலன்களைப் பார்த்துக்கொண்டு எனக்கு ஒத்தாசையாயிரு" என்று அவன் அப்பா சொன்ன பின் அதை எதிர்த்துப்பேச அவனுக்குச் சக்தியேது. கிராமத்தில் இருந்த போதுபொழுதுபோவதற்குப் புஸ்தகமும் கமலியுடன் சந்தோஷமாய் இருந்த நாட்களை எண்ணுவதும் அவனுக்கு உதவி செய்தன.

"ஸார் தந்தி" என்ற குரல் கேட்டு, புஸ்தகத்தை அப்படியே வைத்துவிட்டு வாசலுக்கு வந்தான் வாசு. உள்ளே பூஜை உள்ளில் மந்திரம் ஜபித்துக்கொண்டிருந்த அவன் தந்தையும் வெளியே வந்தார். கையெழுத்துப் போட்டுத் தந்தியை வாசுவிடம் வாங்கிக் கொடுத்தார். அவர் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. தந்தியைப் பிரித்து வாசித்த வாசுவின் உடம்பு மின்சார சக்தியால் தாக்குண்டது போல் ஒரு உணர்ச்சியை அடைந்தது. "கமலி மிகவும் அபாயகரமான நிலைமையில் இருக்கிறாள். உடனே புறப்பட்டு வரவும்" இதுதான் தந்தியிலுள்ள விஷயம்.

அன்று இரவு புறப்படுகிற ரெயிலிலே எல்லோரும் புறப்பட்டனர். சந்திராவை மட்டும் விட்டுப் போவதாயிருந்தார்கள். ஆனால், அவள் தன் மாமியாரிடம் தானும் வருவதாய் மன்றாடிக் கேட்ட பின்னர் அவளையும் உடனழைத்துச் சென்றனர்.

கமலியின் வீட்டு வாசலில் வண்டி நின்றதும் வண்டியிலிருந்து இறங்கின வாசு "கமலீ" என்று அலறிக்கொண்டே உள்ளே சென்றான். மற்றவர்களும் அவன் பின்னாலே சென்றார்கள். கமலி படுத்திருந்த அறைக்குக் கமலியின் கணவன் எல்லோரையும் அழைத்துச் சென்றான். அங்கே அவர்கள் கண்ட காட்சி எல்லோரையும் பிரமிக்கச் செய்தது. கமலி ஒரு கட்டிலில் படுத்திருந்தாள். அவள் பக்கத்தில் சின்னஞ் சிறிய சிசு ஒன்று அழுதுகொண்டு கிடந்தது. வாசுவின் உள்ளம் சுக்கு நூறாக வெடித்துவிடும் போலிருந்தது. அவன், பக்கத்தில் போய் உட்கார்ந்துகொண்டு தேம்பித் தேம்பி அழுதான். கமலியின் மாமி குழந்தையை எடுத்துச் சமாதானப்படுத்த முயன்றுகொண்டிருந்தாள்.

சிறிது நேரம் சென்ற பின் அமைதி நிலவியது. கமலியின் கணவர் சொல்ல ஆரம்பித்தார். "கமலி கர்ப்பமுற்றதாயும், அந்த சமயத்தில் அவளைக் கள்ளிப்பட்டிக்கு அவள் மாமன் மாமியிடம் அனுப்ப உத்தேசித்ததாகவும், ஆனால், அவள் போக மறுத்துவிட்டதாகவும், பிறகு ஒரு மாதத்திற்கு முன்னால் குழந்தை பிறந்ததாகவும், இந்த விஷயங்களொன்றும் கள்ளிப்பட்டிக்குத் தெரிவிக்க வேண்டாமென்று அவள் கெஞ்சிக் கேட்டுக்கொண்டதன் பேரில் தான் தெரியப்படுத்தவில்லையென்றும். தான் இனி பிழைக்கப்போவதில்லையாகையால் தங்களுக்குத் தந்தி அடிக்கும்படிச் சொன்னாளென்றும் அதன்படிதான் தந்தி அடித்ததாகவும் யாவும் சொன்னார்."

அன்று சாயங்காலம் கமலியின் மாமாவும் கணவரும் டாக்டரைப் பார்த்து வருவதற்காகப் போய்விட்டனர். வாசுவின் தாயார் உள்ளே ஏதோ வேலையாயிருந்தாள். சந்திரா கமலியின் அறையில்குழந்தையை மடியில் வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். வாசு திண்ணையில் நின்றுகொண்டிருந்தான். அவன் மனம் மிகுந்த வேதனையடைந்திருந்தது.

"சந்திரா சந்திரா" என்று ஈனஸ்வரத்தில் கூப்பிட்டாள் கமலி. பதில்பேசாமல் அவள் அருகில் போய் உட்கார்ந்தாள் சந்திரா. "சந்திரா என்மீது கோபப்படாதே. நானிருக்கப்போவது இன்னும் சிறிது நேரமே என்று சொல்லும் போதே அவள் கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்தது.'

சந்திரா, அவள் கரங்களைப் பிடித்துக்கொண்டு "அந்த மாதிரி பேசக்கூடாது நீங்கள். கடவுளனுக்கிரகத்தால் பிழைத்தால் நான் எவ்வளவோ விஷயங்கள் சொல்ல வேண்டுமென்று நினைத்துக்கொண்டிருக்கிறேன்" என்றாள் கண்களில் நீர் ததும்ப.

"நீ சொல்லப்போகும் விஷயம் எனக்குத் தெரியும் சந்திரா. உன் வாழ்க்கையைக் கெடுத்த பாவியைப் பற்றிச் சொல்லப்போகிறாய். அவள் நான்தான் என்று உனக்கு மாமி சொல்லியிருக்கிறாள். ஆனால், நான் உன் வாழ்க்கைக்குக் குறுக்கிடாமல் இருப்பதற்காகவே இவ்வளவு நாட்களாய் அங்கு வராமலும் கடிதம் போடாமலும் இருந்தேன். ஆனாலும் உன் கணவர் என்னைப் பற்றிய நினைப்பை விடவில்லை. பித்துப் பிடித்தவர் போலிருக்கிறார் என்று மாமியிடமிருந்து வந்த கடிதம் மூலம் அறிந்தேன். மிகவும் மனவருத்தமடைந்தேன்" என்றாள்.

அச்சமயம் உள்ளே வந்த வாசு கமலியின் அருகில் அமர்ந்தான். கமலி அவன் கைகளையெடுத்துக் கண்ணில் ஒத்திக்கொண்டாள். "வாசு, இது உன்னுடைய குழந்தை, இதை இனி நீதான் காப்பாற்றவேண்டும். எனக்குக் குழந்தையே பிறக்காதென்ற ஜோஸ்யம் பலிக்கவில்லை அந்த ஜோஸ்யம்தான் நம்மைப் பிரித்து வைத்தது நீ அழைத்தபோது நான் வரவில்லையென்று நீ வெறுப்புக் கொள்ளலாம் நான் வரச்சித்தமாயிருந்தேன். ஆனால், என் மாமி மாமாவின் ஒரே பிள்ளையான உன்னை அவர்களிடமிருந்து பிரிக்க என் மனம் இடம் கொடுக்கவில்லை. உலகத்திற்காக எத்தனையோ மகான்கள் எவ்வளவோ தியாகங்கள் செய்திருக்கிறார்கள். அந்த ஜன்ம பூமியில் பிறந்த நான் என்னைச் சிறுவயதிலிருந்து அன்பாய் வளர்த்த மாமா மாமிக்காக உன்னை மறந்து வேறொருவரை மணந்துகொள்ளத் தயங்கவில்லை. உன்னைப் பிரிந்தால் அவர்கள் மனம் எவ்வளவு துன்பப்படும் என்பது எனக்குத் தெரியும். நடந்ததையெல்லாம் மறந்துவிடு. வாசு. இனிமேல் சந்திராவுடன் இன்பமாய் வாழ்க்கையை நடத்து" என்று கூறி சந்திராவின் கையைப் பிடித்து வாசுவின் கையில் கொடுத்தாள். குழந்தையை ஒரு கையால் மார்புடனணைத்துக்கொண்டிருந்த சந்திராவைப்பார்த்துக்கொண்டே அவள் உயிர் பிரிந்தது.

இப்பொழுது கமலி இறந்து ஒரு வருடமாகிறது சந்திராவும் வாசுவும் குழந்தையுடன் கொஞ்சிக்கொண்டிருக்கிறார்கள். சந்திராவின் வாழ்க்கை இப்போது இன்பமாயிருக்கிறது. அவள் கமலியின் படத்தை வைத்துப் பூஜித்து வருகிறாள்.



கொங்கணத்திற்கும் தொண்டை மண்டலத்திற்கும் இடையே உள்ள கங்க நாட்டின் மீது, பாண்டியன் ராஜஸிம்மன் படையெடுத்து வந்தான். இருபதினாயிரம் வீரர்களைக் கொண்ட பாண்டிய சேனை, கங்க நாட்டின் எல்லைப்புறமான குடகமலைச் சாரலில் அணிவகுத்து நின்றது. கங்க நாட்டைக் கொள்ளையிட்டு அழிப்பதற்கு, பாண்டியனின் கட்டளையை எதிர்பார்த்து நின்றார்கள் படை வீரர்கள்.

எட்டு நூற்றாண்டுகளுக்கு முன்பு கடந்த சரித்திரப் பிரசித்தி பெற்ற படையெழுச்சிதான் இது. பாண்டியன் கோச்சடையன் ரணதீரனுக்குப் பகைவர்களான வட நாட்டரசர்களுடன் கங்க நாட்டரசனான சிவமாறன் சேர்ந்துகொண்டான். இதனால் சிவமாறனுக்கும் பாண்டியன் ரணதீரனுக்கும் கடும் பகை உண்டாயிற்று. சிவமாறனைப் பழி தீர்ப்பதற்குத் தகுந்த காலத்தை எதிர்பார்த்திருந்த ரணதீரன், கொடிய வியாதியால் மரணம் அடைந்தான். மரண காலத்தில், தன் புதல்வனான ராஜஸிம்மனை அருகில் அழைத்து, சிவமாறனைப் பழி தீர்ப்பதற்கு வேண்டிய வழிகளை அவனுக்குக் கூறிப் பூத உடலை நீத்தான்.

தன் தந்தை மரண காலத்தில் நினைவுடனும் உறுதியுடனும் உபாயத்துடனும் சொன்னதை ராஜஸிம்மன் நிறைவேற்றத் துணிந்துவிட்டான்; அதற்காகவே இருபதினாயிரம் வீரர்களைக் கொண்ட சேனையுடன் கங்க நாட்டின் மீது படையெடுத்து வந்தான். இதிலிருந்துதான் சரித்திரம் ஆரம்பமாகிறது:—காவிரியின் பிறப்பிடமான குடகமலைச் சாரலிலிருந்து இந்த சரித்திர நதியும் புறப்படுகிறது.

“இன்று பொழுது சாய்வதற்குள் கங்க வேந்தன் சரணடையாவிட்டால் மறுகணமே நாட்டுக்குள் புகுந்துவிடவேண்டும். அதுவரையில் பொறுத்திருங்கள்” என்று பாண்டியன் படை வீரர்களுக்கு உறுதி கூறியிருந்தான். ஆனால், அன்று அவ்விதம் கங்க வேந்தன் சரணடைந்து விடுவான் என்று யாரும் நம்பவில்லை. போர்த் தினவு கொண்ட படை வீரர்கள் 'எப்போது கங்க நாட்டுக்குள் புகுவோம் என்றே எதிர்பார்த்தார்கள்.

பாண்டியன் ராஜஸிம்மன் தன் மதியந்திரியான மாறன்காரியின் விருப்பத்துக்கு இணங்கி, முன்னதாகக் கங்க வேந்தனுக்குத் தூதுவர் மூலம் எச்சரிக்கை விடுத்தான். பாண்டியனின் எச்சரிக்கைக்கு அவன் பணிந்துவிடுவான் என்பது நோக்கமன்று. போர் புரிபவன் தன் கருத்தை முன்னதாகப் பகைவனுக்கு உணர்த்திவிட்டு, அதற்கு அவன் இசையவில்லையேல் அதன்பின் பொருவதே போர் முறை என்பது அந்நாளில் ஆண்ட அரசர்களின் கொள்கை. அதனாலேயே போர் புரியுமுன் பாண்டியன் கங்க வேந்தனுக்கு, தான் வந்திருக்கும் நோக்கத்தைப் பற்றித் தூதுவர் மூலம் உணர்த்திவிட்டான். பாண்டியனின் நோக்கம், கங்கவேந்தனால் நிறைவேற்றக் கூடியதா என்பது வேறு விஷயம். அது கங்க வேந்தனைப் பொறுத்தது அல்லவா?

காவிரியின் பிறப்பிடமான குடகமலைச் சாரலில்—அந்நதியின் வடகரையிலேதான் பாண்டியன் ராஜஸிம்மன் படைகளுடன் தங்கியிருந்தான். மலைச்சாரலிடமெங்கும் கணக்கற்ற கூடாரங்கள் போடப்பட்டிருந்தன. தேர்கள், வண்டிகள், எருதுகள், பல்லக்குகள் குதிரைகள், யானைகள் முதலியன வரிசையாகவும் தொகுதியாகவும் நிறுத்தப்பட்டிருந்தன. ஒளி வீசுகின்ற ஈட்டி, வேல் வாள், தோமரம், கிடுகு முதலிய பல ஆயுதங்கள் கணக்கின்றிக் காணப்பட்டன. ஆயுதம் தாங்கிய வீரர்களும் பண்டப் பொதிகளைத் தாங்கிய பணியாட்களும் கூட்டம் கூட்டமாக அங்குமிங்கும் திரிந்துகொண்டிருந்தனர்.

படை வரிசைகளின் நடுவே போர்ப்பறை முழங்கிக்கொண்டிருந்தது. பகைவர் உள்ளத்தை நடுங்கச்செய்யும் வீரமுரசும் ஒலித்துக்கொண்டிருந்தது; சிறிது நாழிகைக்கு ஒருமுறை தாரை, கொம்பு முதலிய வாத்தியங்கள் இயம்பிக்கொண்டிருந்தன.

படை வரிசைகள், பண்டப் பொதிகள், ஆயுத சாலைகள், கூடாரங்கள் இவைகளைச் சுற்றிலும் வேல் தாங்கிய வீரர் இயங்கியவாறே காவல் செய்தார்கள். மீன் உருவம் எழுதிய கயற்கொடி ஒவ்வொரு கூடாரங்களுக்கு முன்பும் படை வரிசைகளுக்கு முன்பும் வானையளாவ அசைந்துகொண்டிருந்தது.

மலைச்சாரலெங்கும் அடர்ந்த மரங்கள் நிறைந்திருந்தன. வாசனைப் பூக்களின் நறுமணத்தை வாரி வீசிக்கொண்டிருந்தது மலைக் காற்று. மலைக் காற்றின் இன்பத்தை நுகர்ந்து மரங்களடர்ந்த மலைச் சாரலிலே, போர் செய்வதைப்பற்றிச் சிந்தனை செய்தவனாய் மந்திரிகளுடன் பாண்டியன் தங்கியிருந்தான். மலைச் சாரலுக்கு அருகிலே காவிரி நதி பொன்னும் மணியும் கொழித்துக் குணதிசை நோக்கிப் பாய்ந்து சென்றது. அந்நதி பெருகிப் புரண்டு செல்லும்



ஓசை அம்மலைச் சாரலெங்கும் எதிரொலித்துக்கொண்டிருந்தது. அவ்விடத்திலிருந்து தொண்டை மண்டலம் வரையில் கங்க ஸாம்ராஜ்யம் பரந்திருந்தது என்றால், கங்க வேந்தனைப்பற்றி அற்பமாக நினைக்க முடியுமா? அல்லது கங்க நாட்டின் மீது படையெடுத்துள்ள பாண்டியனின் திறமையைத்தான் அற்பமாக மதிக்க முடியுமா?

வெ. வெங்கடதாஸன்

கதிரவன் உச்சி வானிலிருந்து மேல் வானத்தை அடைந்துகொண்டிருந்தான். பொறி பறக்கும் வெயில் வீசிக்கொண்டிருந்தது என்றாலும், அதன் வெம்மை மலையின் மேல்மட்டங்களில்தான் தெரிந்தது. மலைச்சாரலில் உள்ள மரம்பொதும்பருக்குள் கதிரவனின் கதிர்வாள் ஒன்றுகூடப் புகமுடியவில்லை. சில்லென்ற காற்று எப்போதும் வீசிக்கொண்டிருந்தது. அருகிலே காவிரி நிறைமுகுடன் போய்க்கொண்டிருக்கையில், வெம்மைக்கு இடம் உண்டா?

பாண்டியன் அங்கே வந்து தங்கி அன்றோடு மூன்று நாட்கள் முடிவடைகின்றன. கங்கவேந்தனிடமிருந்து அன்று பொழுது சாய்வதற்குள் செய்தி தெரியவேண்டும். கங்கநாட்டின்மீது படையெடுப்பதா — இல்லையா — என்பதை அன்று பொழுதுக்குள் முடிவு செய்தாகவேண்டும். அதைப்பற்றித் தீவிர யோசனை செய்தான் பாண்டியன்.

பெரிதாக அலங்கரிக்கப்பெற்ற கூடாரத்திலே பாண்டியன் இருந்தான். கூடாரத்தின் நாலுபுறமும் திரைகள் தூக்கிக் கட்டப்பட்டிருந்தன. கூடாரத்தின் நடுவே சித்திரக்கட்டில் ஒன்றில் பஞ்சணை மீது பாண்டியன் ராஜஸிம்மன் அமர்ந்திருந்தான்; அவனுக்கு வயது இருபத்தைந்துதான் அறிவும் அநுபவமும் அதிகம். குல வித்தை இயல்பாகவே நன்கு அமைந்திருந்தது. அவனுக்கு அருகிலே கீழே ரத்ன கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது. மந்திரி மாறன் காரி சேனாதிபதி மாறன் எயினன், மற்றும் பல தலைவர்கள் கம்பளத்தில் அமர்ந்திருந்தார்கள். பாண்டியனுக்கு இரு பக்கங்களிலும் பணிப்பெண்கள் இருவர் சாமரை வீசிக்கொண்டிருந்தனர். வேறு சில மகளிர் தாம்பூலம் தாங்கிக்கொண்டும், மதுக்கிண்ணங்கள் ஏந்திக்கொண்டும், பழவர்க்கங்கள் எடுத்துக்கொண்டும் நின்றார்கள்.

பாண்டியன் இள நகையுடன் மஞ்சத்தில் சாய்ந்தபடியே, மந்திரியை நோக்கி ஏதோ கேட்டுக்கொண்டிருந்தான். மதி மந்திரியான மாறன்காரி பாண்டியனுக்கு விடை கூறிக்கொண்டு புன்னகையுடன் அமர்ந்திருந்தான்.

"கங்கராஜனின் தலைவிதியை இன்னும் சில கணங்களில் முடிவு செய்தாக வேண்டும். இனி பொறுத்திருப்பது வீண் என்றுதான் எண்ணுகிறேன்" என்று பாண்டியன் முடிவாகக் கூறினான்.

"இன்னும் ஐந்து நாழிகைப் போது இருக்கிறதே!... பொறுத்துப் பார்ப்போம்' என்று பணிவோடு சொன்னான் மந்திரி மாறன் காரி.

"நாம் இங்கே வந்து தங்கி மூன்று நாட்கள் முடிவடைவதற்கு இன்னும் ஐந்து நாழிகைதான் இருக்கிறது;...இதுவரையில் சிவமாறனிடமிருந்து ஒன்றுமே செய்தி வரவில்லை...இனிமேல் அவன் சரணடையப் போகிறானா?..."

"நாம் எச்சரிக்கை விடுத்தபடி இன்று அஸ்தமனம் வரையில் பொறுத்துப் பார்ப்போம். தாங்கள் எப்படிக் கருதுகிறீர்கள்?"

"மந்திரி, நான் பொறுமையை இழக்கவில்லை. ஆனால் சிவமாறன் சரணடைவான் என்று நான் நம்பவில்லை."

"ராஜஸிம்மரே, கவலை ஏன்? எப்படியும் அவனிடமிருந்து செய்தி வந்துவிடும். இல்லையேல் அவன் பேடிக்குச் சமமானவன்"

"நீ நினைப்பதுபோல் நடந்துவிடுமென்று நான் நம்பமுடியவில்லை. உன்னுடைய யோசனையை ஏற்றுக்கொண்டு எச்சரிக்கை விடுத்தேனேயன்றி வேறல்ல!...என்னுடைய படை வன்மையை அவன் அற்பமாக எண்ணியிருப்பான்...ஆகவே, படை கொண்டு பொருத பின்பே அவன் நம்மிடம் சமாதானத்திற்கு வருவான்."

'உண்மை!......ஆனால், அவன் மீதுள்ள பகை காரணமாக நாட்டு மக்கள் இடர்ப்படுவது நியாயமல்ல என்று எண்ணுகிறேன். இல்லையேல் எச்சரிக்கையே அவனுக்கு வேண்டாம்."

"மந்திரி, உண்மையில் கங்க நாட்டு மக்கள் நமக்குப் பகையல்ல. கங்க ராஜனான சிவமாறனே பகைவன்...என் தந்தையார் மரண காலத்தில் சொன்னதை நான் மறக்கமுடியுமா? என் தந்தைக்குக் கடும் பகையான சிவமாறனை வேறு வழியில் அடக்கமுடியாது... நாம் விடுத்த எச்சரிக்கை அவனை நிலைகலங்கச் செய்திருக்குமே!"

'சந்தேகம் என்ன? நம் எச்சரிக்கைப்படி அவன் நடந்தால் மானமுடன் வாழமுடியும் பகையின்றி இருக்கமுடியும். இல்லையானால்

கங்க ஸாம்ராஜ்யம் பாண்டிய ஸாம்ராஜ்யத்தோடு இணைக்கப்படும்; கங்கராஜன் கையிலும் காலிலும் விலங்கிடப்பட்டு மதுரைக் கோட்டையில் சிறைச்சாலையை வாழ்விடமாகப் பெறுவான். என்றும் அழியாப் புகழ் கொடுப்பதான நாகரத்னமும் கங்கராஜன் பெற்ற ஜீவரத்னமும் தங்களுக்கு உரிமையாக்கப்படும் அதைக் கண்டு தமிழகமே பூரிப்படையப் போகிறது.'

மந்திரி மாறன்காரி கூறியதைக் கேட்டு பாண்டியன் நகைத்தான். அந்த நகைப்பின் முடிவிலே ஆழ்ந்த பெருமூச்சும் வெளிப்பட்டது. மாறன்காரி சற்றும் தயங்காமல் பாண்டியனை அன்பு கனிய நோக்கினன்.

"ராஜ ஸிம்மரே, அந்தக் கவலை தங்களுக்கு வேண்டாம்; நாகரத்னமும் ஜீவரத்னமும் தங்களுக்கு உரிமையாகும்படி செய்வது என் கடமை; அந்த ஜீவரத்னம் அற்புத அழகுடையதென்று சொல்லக் கேட்டிருக்கிறேன். அழகுடைய அப்பொருள் தங்களை அடைவதே ஏற்றதாகும்; அப்பொருளுக்கு அதைவிடச் சிறந்த பாக்கியம் என்ன இருக்கும்?"

"மந்திரி.... அதைப்பற்றி அதிகமாக வருணிப்பது கவலையை உண்டாக்கும்; காணாத பொருளின்மீது நான் ஆசை வைத்துவிட்டேன். என் தந்தையார் இறக்கும்போது சொல்லியிராவிட்டால் இவ்வளவு தூரம் நான் கவலைப்படமாட்டேன். அவர் சொன்னது முதல் என் மனம் அந்த இரண்டு ரத்னங்கள் மீதும் ஈடுபட்டுவிட்டன; காணாத அப்பொருள்கள் மீதே கற்பனை செய்துவிட்டேன். உலகிலே உயர்ந்த அவற்றை நான் அடையப் பெற்றால், பாக்கியம் செய்தவன் தான். அவை இரண்டும் எனக்குக் கிடைக்கப் பெற்றால் ஜன்ம விரோதியான சிவமாறனை உயிர் கண்பனாக மதிப்பேன் இல்லையென்றால், இந்தப் பெரும் படையுடன் கங்க ஸாம்ராஜ்யத்தைக் கொள்ளையிட்டு, சிவமாறனைச் சிறைப்பிடிப்பேன்! ரத்னங்களைக் கைக்கொள்வேன். இது உறுதி!... உன்னுடைய உதவி இம்முயற்சியில் இன்றியமையாதது. என் தந்தையார் ரணதீரருக்குச் செய்துவந்த உதவியை எனக்கும் செய்து வருவாய் என்று நம்புகிறேன்."

"ராஜஸிம்மரே, இதுவரையில் நடந்ததுபோல் இனியும் நடக்கும்; கவலை ஏன்? பொறுமையுடன் இருந்தால் முயற்சி வீணாகாது."

"மந்திரி,...முயற்சி மட்டும் பயனளிக்காது; தவமும் செய்திருக்க வேண்டும்."

'சந்தேகம் என்ன? தவமும் முயற்சியும் இல்லாமல் எந்தக் காரியமும் பயன்படாது. தாங்கள் செய்துள்ள தவம் வேறு யார் செய்திருக்கிறீர்கள்? தமிழகத்தில் இன்று முடிமன்னராக விளங்கும் தாங்கள் இணையற்ற தவம் செய்தவர்கள்!.."

"மந்திரி, என் முன்னோர் செய்த தவமல்லவா அது!"

"ராஜஸிம்மரே, தங்களை அடைவதற்கு அந்த இரண்டு ரத்னங்களும் தவம் செய்திருக்க வேண்டும் என்றுதான் நான் கவலைப்படுகிறேன்' என்றான் மந்திரி மாறன்காரி.

'தவம் இருக்கட்டும்;.........நம்முடைய முயற்சியால் தான் அவற்றை அடையவேண்டும்" என்று பாண்டியன் கூறிவிட்டுக் கூடாரத்துக்கு வெளியே சட்டென்று உற்றுப் பார்த்தான்.

"மந்திரி என்ன சப்தம் இது?... குதிரை வரும் ஓசை கேட்கிறதே!" என்றான். மந்திரியும் உற்றுப் பார்த்தான். சற்று தூரத்திலிருந்து 'டக்டக்' என்று குதிரை வரும் ஓசை கேட்டது; மிக அண்மையில் ஓசை கேட்டது.

அடுத்த சில கணங்களில் பாண்டியன் இருந்த கூடாரத்திற்குச் சிறிது தூரத்திலேயே குதிரை வரும் சப்தம் நின்றுவிட்டது சேனாதிபதியும் மந்திரியும் கூடாரத்திலிருந்து வெளியே வந்து நின்று நாலு புறமும் பார்த்தார்கள்.

கீழ்த்திசையில் ஒரு மர நிழலில் குதிரையிலிருந்து ஒரு வீரன் இறங்குவதைக் கண்டார்கள். குதிரை மர நிழலில் நின்றது. வீரன் மட்டும் கூடாரம் இருந்த திக்கு நோக்கிக் கடுகி நடந்துவந்தான். அவனை இடைமறித்துச் சில பாண்டிய வீரர்கள் சூழ்ந்து கொண்டார்கள். உடனே அவ்வீரன் படைவீரர்களுடன் பாண்டியனின் கூடாரத்துக்குக் கொண்டு வரப்பட்டான்.

மந்திரியும் சேனாதிபதியும் உற்றுப்பார்த்துவிட்டு, ஒருவாறு முடிவு செய்துகொண்டு, கூடாரத்துக்குள் புகுந்தார்கள்.

"கங்கராஜனிடமிருந்து தூது வருகிறது என்று நினைக்கிறேன்" என்று கூறிவிட்டு மந்திரி அமர்ந்து கொண்டான். அப்போது இரு வீரர் உள்ளே புகுந்தார்கள்.

"பிரபு!... கங்கராஜனிடமிருந்து தூது..." என்று சொல்லியவாறே தலைவணங்கிய வீரர்களைப் பாண்டியன் கைகுவித்தான்.

"உள்ளே வரவிடு!" என்று கட்டளையிட்டான்.

இரு வீரர்களும் கூடாரத்துக்கு வெளியே சென்றார்கள். அடுத்த கணத்திலே தூது வந்த வீரன் உள்ளே புகுந்தான் சித்திரக் கட்டிலில் அமர்ந்திருந்த பாண்டியனைக் கண்டவுடன், கைகுவித்து வணங்கினன்.

"நீ யார்? எங்கிருந்து வருகிறாய்?' என்று கேட்டான் பாண்டியன். அவனுடைய கம்பீரத் தொனியைக் கேட்டு நாணத்தால் முகம் சிவந்தான் வீரன். பாண்டியன் நகை செய்தான்.

"ராஜ ராஜரே! ...கங்கராஜனின் புதல்வன் யான்! வணங்குகிறேன்" என்று மீண்டும் தலைவணங்கினன். உடனே பாண்டியன் நகை செய்தபடியே, இவன் அதி நாகரிகதை இருப்பான் போல் இருக்கிறதே! என்று தனக்குள் எண்ணிக் கொண்டான்.

"நல்லது!.....உன் பெயர்!......" என்றான் பாண்டியன் மேலும் நகை செய்துகொண்டே.

"வல்லபன் என்று என்னை அழைப்பார்கள். கங்க நாட்டின் தலைநகரான கங்கபாடியிலிருந்து வருகிறேன்; என் தந்தை சிவமாற வேந்தரிடமிருந்து செய்தி கொணர்ந்தேன். தாங்கள் பாண்டிய ஸாம்ராஜ்பாதிபதியான ராஜஸிம்மர்தானே!..." என்று அமைதியாகக் கேட்டான் சிவமாறனின் புதல்வனான வல்லபன்.

சேனாதிபதியும் மந்திரியும் திடுக்கிட்டார்கள்.

"என்னை அறிந்துகொண்ட பின்பு, இந்தக் கேள்வி எதற்கு?... வல்லபா!... அவ்விடத்தில் அமர்ந்து கொள்" என்று கீழே சுட்டிக் காட்டினன் பாண்டியன்.

கங்கராஜனின் புதல்வனான வல்லபன் கீழே விரிக்கப்பட்டிருந்த ரத்ன கம்பளத்திலே அமர்ந்து கொண்டான். அமர்ந்த பின் பாண்



டியனின் முகத்தை உற்றுப்பார்த்தான். 'இவ்வளவு இளமையும் அழகும் உடையவஞ பாண்டியன்!' என்று தனக்குள் வியப்படைந்தான். பாண்டியனின் வயதுதான் வல்லபனுக்கும் இருக்கும். ராஜபுத்ரஞதலால் வசீகர முகமுடையவஞகவே காணப்பட்டான் அவன். அவனைக் கண்டு பாண்டியனும் வியப்படைந்தான். வல்லபன் என்ன கூறுவாஞே என்று எதிர்பார்த்தார்கள் மந்திரியும்மற்றவர்களும் ஆஞல், மௌனமாக இருந்தான் வல்லபன்.

"வல்லபரே, கங்கராஜரிடமிருந்து கொணர்ந்த செய்தி என்னவோ!......தெரிவிக்கவேண்டும்" என்று சொன்ஞன் மந்திரி.

மந்திரியின் வார்த்தைகளைப் பொறுக்காதவன்போல் வல்லபன் அவனைக் கடுமையாகப் பார்த்தான். உடனே பாண்டியனைப் பார்த்துச் சொல்லலாஞன்.

'ராஜஸிம்மரே, தங்கள் கொற்றம் வாழ்க! என் தந்தை சிவமாற வேந்தர் கூறியதைத் தெரிவித்துக் கொள்கிறேன். பாண்டிய வேந்தரின் பகையை நாம் என்றும் விரும்பவில்லை. ஆஞல், பழம் பகையை வளர்ப்பதில் என்ன நன்மை இருக்கிறது? தங்கள் தந்தையார் ரண தீரருடன் நேர்ந்த பகைக்கு நாங்கள் பெரிதும் வருந்துகிறேரும்; தங்களுடன் நட்புடன் வாழ ஆவல் உள்ளவர்களாயிருக்கிறேரும்: ஆஞல்—" என்று கூறிச் சிறிதே தயக்கத்துடன் பார்த்தான் பாண்டியனின் முகத்தை.

வல்லபனின் பேச்சு பாண்டியனுக்குக் கடுங் கோபத்தை உண்டாக்கி விட்டது. பஞ்சணையில் சாய்ந்திருந்தவன் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

"கங்கராஜனின் சூழ்ச்சியைப் பற்றி என்னிடம் ஒன்றும் சொல்ல வேண்டாம்; மானமுடன் வாழ வேண்டுமாஞல் நான் விடுத்த எச்சரிக்கைப்படி நடக்கவேண்டும். நீ இப்போது சொல்லத் தயங்குவதை நான் கேட்க விரும்பவில்லை. இது பெரிய சூழ்ச்சி என்று முடிவு செய்துவிட்டேன். ஆஞல் ஒன்று; நீ நன்ருக அறிந்துகொள்!...... இருபதிஞயிரம் வீரர்களைக் கொண்ட சேனையுடன் வந்தவன்... காலதாமதம் செய்யமாட்டேன்;... விரைவில் முடிவாகச் சொல்லிவிடு..." என்று பாண்டியன் கொடுங்குரலில் கூறி வல்லபனை வெறுப்புடன் பார்த்தான்.

பாண்டியனின் சீற்றத்தைக் கண்டு நிலை கலங்கிவிட்டான் வல்லபன்.

(தொடரும்)

# கைகாரக் குடியானவன்

(நடராஜன்)

ஒரு ஊரில் ஒரு அரசன் இருந்தான் அவன் ஒரு நாள் வேட்டைக்கு போகும்போது வழியில் ஒரு வயலில் ஒரு குடியானவன் வேலை செய்துகொண்டிருப்பதைப் பார்த்தான். அரசன் அவனிடம், இது உன் சொந்த நிலமா என்று கேட்டான். அவன், இது என் சொந்த நிலமல்ல. கூலிக்கு வேலை செய்கிறேன் என்ருன். தினக் கூலி என்ன என்ருன் அரசன் தினக்கூலி நாலு பணம் என்ருன் குடியானவன். நீ அந்த நாலு பணத்தை என்ன செய்வாய் என்ருன் அரசன்.



அதற்கு குடியானவன், ஒரு பணத்தை என் செலவுக்கும், ஒரு பணத்தை வட்டிக்கும், ஒரு பணத்தை பழைய கடனுக்கும், ஒரு பணத்தைக் குப்பையிலும் போடுகிறேன் என்ருன். அதன் பொருள் அரசனுக்கு விளங்கவில்லை. அரசன் குடியானவனிடம், அதன் பொருள் என்னவென்று கேட்டான்.

அதற்கு குடியானவன், எனக்கும் என் மாடுகளுக்கும் செய்யும் செலவு என் செலவாகும். என் மக்களுக்குச் செய்யும் செலவு வட்டிக்கு விடும் பணமாகும். என் பெற்றேர்களுக்குச் செய்யும் செலவு கடன் பணமாகும் என் மனைவிக்குச் செய்யும் செலவு குப்பையில் போடும் பணமாகும் என்று கூறினன். அதைக் கேட்ட அரசன், குடியானவனுடைய புத்தி சாதுர்யத்தை மெச்சி, அவனுக்கு ஒரு பவுனைக்கொடுத்து, நாம் இப்பொழுது பேசினதைப் பற்றி என் தலையை நூறு முறை பார்ப்பதற்கு முன் யாரிடமும் சொல்லக்கூடாது என்ருன். குடியானவனும் அதற்கு ஒப்புக்கொண்டான்.

பின்னர் அரசன் தன் மந்திரிகளிடம் பின் காணும் ஒரு புதிர் போட்டான்:—

ஒரு குடியானவன் தனக்கு ஒரு பணமும், வட்டிக்கு ஒரு பணமும், கடனுக்கு ஒரு பணமும், குப்பையில் ஒரு பணமும் ஆக நான்கு பணத்தைச் செலவு செய்கிருன். இதன் பொருள் என்ன என்ருன் ஒரு மந்திரிக்கும் அதன் பொருள் விளங்கவில்லை. பிரதானமந்திரி, யாரிடம் அரசன் இரகசியமாய்ப்பேசினன்என்பதைத்தெரிந்துகொண்டு, அக்குடியானவனிடம் சென்று அதன் பொருள் என்ன என்ருன். அதற்குக் குடியானவன் "நான் அரசருடைய முகத்தை நூற்று எட்டு தடவை பார்ப்பதற்கு முன் யாரிடமும் சொல்லக்கூடாது" என்ருன். மந்திரி தன் பையிலிருந்து ஒருரூபாயை எடுத்து குடியானவனிடம் கொடுத்து, இதை நூற்று எட்டு தடவை திருப்பிப் பார்த்து விட்டுச் சொல் எனக் கூறினன். குடியானவன் அதை வாங்கித் தன் பையில் போட்டுக்கொண்டான். பிறகு அதே மாதிரி மீதி நூற்றேழு ரூபாயையும் வாங்கிக்கொண்டு பதிலைக் கூறினன். மந்திரியும் அந்தப் பதிலை அரசனிடம் கூறிப் பரிசு பெற்ருன். பின் அவன் அக்குடியானவனை அழைத்து, நீ ஏன் அந்தப் பதிலை மந்திரியிடம் கூறினய்? எனக் கேட்டான். அதற்கு அவன், தங்கள் முகத்தை நான் ரூபாயில்



108 தடவை பார்த்தேன். அதனுல்தான் கூறினேன் என்ருன். அரசன் நீ 'ஏன் 100 தடவைக்கு 108 தடவை பார்த்தாய்' எனக்கேட்டான். அதற்கு அவன் 'நான் பார்த்ததில் செல்லாத ரூபாய்களும் இருக்கலாம். அதனுல்தான் நான் 108 தடவை தங்கள் முகத்தைப் பார்த்தேன்' என்ருன். அவனுடைய பதிலைக் கேட்டு அரசன் அவனைத் தன் மந்திரியாக்கிக் கொண்டான்.

# பரீட்சை முடிவு

 (கோமதி ஸ்வாமிநாதன்) 

| | | |
|---|---|---|
| மணி | ... | கதாநாயகன் |
| சீதாம்மாள் / ராமய்யர் | ... | கதாநாயகனின் தாயார், தகப்பனர் |
| சூடா | ... | கதாநாயகனின் தங்கை |

[காலை வேளை. ராமய்யர் அடுத்த வீட்டு கோபாலய்யருடன் திண்ணையில் பேசிக்கொண்டிருக்கிறார்.]

ராமய்யர்:—கோபாலய்யர்வாள், உம்மாலே ஓர் காரியம் நடக்கணுமே.

கோபாலய்யர்:—என்ன ஓய், பிரமாதமான பீடிகை போடரீர்.

ராமய்யர்:-பிரமாதம் ஒண்ணுமில்லேங்காணும். இந்தக் காப்பி தித்திப்பா இருக்கணும் என்று ஏதோ உப்பு மாதிரி வெள்ளையாய்ப் போடுவளே அதுதான் காணும். பேருகூட மறந்து போச்சு. அது அகப்படவே இல்லே.

கோபாலய்யர்:-அடடே, ஜீனி கிடைக்கவில்லை என்று சொல்லும்!

ராமய்யர்:—வயிற்றெரிச்சலை ஏன் கேழ்க்கரீர், ஒரு மாசமா கசந்து வழியர காப்பி கழுத்துக்குக் கிழே இறங்கமாட்டேன் என்கிறது. ஒரு கடையிலாவது ஜீனி இருக்கு என்று சொல்லவும் மாட்டேனென்கிறான். கல்யாணத்திற்கு மாப்பிள்ளை தேடரமாதிரி காப்பிக்கு ஜீனி தேடவேண்டியிருக்கிறது.

கோபாலய்யர்:-நேற்று எனக்குக் கிடைத்தது.

ராமய்யர்:—நீர் அதிர்ஷ்டசாலிங்காணும் எனக்குக் கொஞ்சமாவது கொடுமே.

கோபாலய்யர்:—அவசரப்படரீரே. நேற்று போட்டிப் பந்தயத்திற்கு விடை அனுப்பினேன். அதிலே "ஜீனி" என்கிற வார்த்தை வராப் போலே குறிப்புக் கொடுத்திருந்தான். ரொம்ப சிரமத்தின் பேரில்தான் அந்த வார்த்தை கிடைத்தது. அதைத்தான் சொன்னேன்.

ராமய்யர்:—சரி சரி. நீர் எனக்கு வாங்கிக் கொடுக்கு முன்னே நானே உமக்கு வாங்கிக் கொடுத்துவிடுவேனே.

கோபாலய்யர்:—(ஆவலுடன்) உமக்கு யாரும் கொடுக்கிறேன் என்று சொல்லியருக்காளா? என்னை மறந்துடமாட்டீரே.

ராமய்யர்:-என் பெண் சூடா கல்யாணத்திற்கு எப்படியும் ஓடி ஆடி ஜீனி கொண்டுவந்துவிடுவேன். அப்போது கண்டிப்பாய் உமக்குத் தரேன்.

கோபாலய்யர்:—(ஏமாற்றத்துடன்) இப்போ தான் உம்முடைய சூடாவிற்கு ஏழு வயது. கல்யாணமாக இன்னும் குறைஞ்ச பக்ஷம் இருபது வருஷமாவது ஆகும். அதுவரை என்னைக் கசப்புக் காப்பி குடிக்கச் சொல்லீராக்கும்.

ராமய்யர்:-உம்முடைய போட்டிப் பந்தயத்தில் தான் நிறைய ஜீனி இருக்கே.

கோபாலய்யர்:—என்னங்காணும் தமாஷ் பண்ணீர். இரண்டு பேருமா கலந்து யோசித்து ஒரு முடிவிற்கு வருவோமா? யாரையாவது காக்காய் பிடிச்சாத்தான் காரியம் நடக்கும்.

ராமய்யர்:-காக்காயுமாச்சு, குருவியுமாச்சு. ஜன்மம் பூராவாகக் கட்டிக்கொண்டு அழுகிற ஆபீஸ் துரையையே நம்மால் காக்காய் பிடிக்க முடியவில்லை. நாம்தானா புதிசா யாரையும் போய் தாஜா பண்ணப் போரோம்?

[மணி உள்ளிருந்து வருகிறான்]

மணி:—அப்பா! அப்பா! அம்மா கூப்பிடரா. அவசரமாம்.

ராமய்யர்:—அவளுக்கென்னடா வேலை. முக்யமான விஷயம் பேசிக்கொண்டிருக்கா என்று சொல்.

(மணி போகிறான். சூடா வருகிறாள்)

சூடா:—அப்பா, அம்மா சத்தம் போடரா. அடுத்தாத்து ப்ராமணரோடே, வெடிஞ்சதிலே யிருந்து வெட்டி வம்பு அடிக்க ஆரம்பிச்சா, ஆத்துக் காரியம் எப்படி நடக்கும் என்று கூச்சல் போடராள்.

(அசடு வழிய கோபாலய்யர் போகிறார். ராமய்யர் உள்ளே வருகிறார்)

சீதாம்மாள்—ஏன்னா! சீக்கிரமாய் மார்க்கெட்டுக்குப் போய் என்னத்தையாவது வாங்கித் தொலைச்சாத்தானே காலைக் காரியம் ஆகும்.

யாராவது பேசக்கிடைத்தால் வாயைப் பார்த்துக் கொண்டே உட்கார்ந்து விடுகிறீர்களே.

மணி:—அப்பா! எனக்கு இன்னிக்கு சண்டிப் பாய் சைக்கிள் வாங்கித் தரவேண்டும்.

ராமய்யர்:—இதோ போய் சைக்கிள் வாங்கிக் கொண்டுவரேன். அதை நறுக்கி உங்கம்மா சமையல் பண்ணட்டும். மடப் பயலே, நீ படிச்சுக் கிழிக்கர லக்ஷணத்திற்கு மோட்டார், ஏரோப்ளேன்கூட வாங்கித் தருவா!

மணி:—பள்ளிக்கூடத்திலே இன்னிக்கு பரீட்சை ரிஸல்ட் ஒட்டப்போகிறார்கள். வகுப்பில் முதலாகப் பாஸ் பண்ணப்போரேன். அப்போயாவது சைக்கிள் வாங்கித்தரியா?

சீதம்மாள்:—ஏண்டா மணி! நீ சொல்லவே இல்லையேடா. இன்னிக்கா பரீட்சை ரிஸல்ட் ஒட்டப்போரா? (ராமய்யரைப் பார்த்து) போங்கோன்னு மார்க்கெட்டிலே கொஞ்சம் முட்டைக் கோசும் உருளைக் கிழங்கும் வாங்கிண்டு வாங்கோ. குழந்தை பரீட்சை பாஸ் பண்ணப் போரான். இன்னிக்கு எல்லோரும் விருந்து சாப்பாடு சாப்பிடலாம்.

ராமய்யர்:—உன் பிள்ளை உருளைக் கிழங்கு உருளைக்கிழங்காகத்தான் மார்க்குகள் வாங்கியிருப்பான்.

சீதம்மாள்:—அவனை ஏதாவது சொல்லாத போனால் உங்களுக்குப் போதுபோகாது. குழந்தை ராவாப் பகலா உசிரை விட்டுப் படிச்சிருக்கான். அவன் படிச்ச படிப்பிற்கு அவனை ஒரே ஒரு வருஷத்தில் மூணு கிளாஸ் மேலே அனுப்பிக்கணும்.

ராமய்யர்:—அவன் விளையாடியிருக்கிற விளையாட்டிற்கு அவனை ஒரே வருஷத்தில் நாலு கிளாஸ் கீழே அனுப்பிக்கணும்.

(துண்டை எடுக்க கோட் ஸ்டாண்டிற்குப் போகிறார்)

ராமய்யர்:-(கோபத்துடன் இரைந்து) டேய்! மணி, இங்கே வாடா. இந்த வெளுத்த துண்டிலே யாரு மையைக் கொட்டியிருக்கா. நீதானேடா?

மணி:—(தயக்கத்துடன்) உன் மேஜையிலிருந்த புஸ்தகத்தில் கை தவறி மைக்கூடு கவிழ்ந்துவிட்டது. சட்டென்று துடைக்க வேறு துணி அகப்படவில்லை.

[ராமய்யர் வேகமாய் போய் மேஜையின் மீது மை அபிஷேகம் செய்யப்பட்ட புஸ்தகத்தை எடுத்து வருகிறார்.]

ராமய்யர்:—இது ஆபீஸ் புஸ்தகம்டா! துரையோடது. அவனுக்குக் கோபம் வந்தா என் தலையிலே மையைக் கொட்டிப்புடுவானே. (புஸ்தகத்தை உள்ளே பிரட்டிப் பார்த்து, துள்ளிக் குதிக்கிறார்) டேய்! இதுக்குள்ளே ஒரு காயிதம் வச்சிருந்தேனே எங்கேடா?

மணி:—கெட்டிக்காயிதமாக இருந்தது. காத்தாடி பண்ணி பறக்கவிட்டேன்.

ராமய்யர்:-சிவ சிவ! உன்னைக் கொன்னுப்பிடரேன் பாரு. கால் வீசை ஜீனிக்கு கால் கடுக்க நடந்து கெஞ்சிக் கதறி ஓர் கூப்பன் வாங்கி வைத்திருந்தேன். (மணியை அடிக்க வருகிறார்; சீதம்மாள் வந்து மணியை மறைத்துக்கொண்டு குறுக்கே நிற்கிறாள்)

சீதம்மாள்:—என்னுத்தான் இருக்கு போங்கோ. ஏன் இப்படி நாடகம் ஆடறிகள். குழந்தை பாஸ் பண்ரன்னிக்கு அவனைக் கொன்னுப்பிடுவேன் என்று அழகாத்தான் ஆசீர்வாதம் பண்றிகள். மணி! ஷெல்பிலே பக்ஷணம் வச்சிருக்கேன். எடுத்துத் தின்னுப்பிட்டு பள்ளிக்கூடத்திற்குப் போ. ரிஸல்ட் ஒட்டினதைப் பார்த்துவிட்டு சீக்கிரமா சாப்பிட வந்துடு.

இன்னிக்கு உனக்காக விருந்து.

(போகிறார்கள்)

## 2

[பிற்பகல் ஒரு மணி. பள்ளிக்கூடத்திற்கு ரிஸல்ட் பார்க்கப் போன மணி இன்னும் வரவில்லை. ராமய்யர், கோபத்துடன் திண்ணையின் மேலும் கீழும் நடந்துகொண்டிருக்கிறார். மளிகைக் கடைக்காரப் பையன் வருகிறான்]

கடைப் பையன்:-சாமி, ஒரு அவசர விஷயமாய் செட்டியார் உங்களைப் பார்த்துவிட்டு வரச் சொன்னாரு.



ராமய்யர்:—உங்க செட்டியாருக்கு எப்போ பார்த்தாலும் அவசரம்தான். என் கையிலே இப்போது தம்பிடி கிடையாது. மாசம் பிறந்துதான் ரூபாய் கொடுக்க முடியும்.

கடைப் பையன்:—அதில்லீங்க இது உங்க சொந்த விஷயமுங்க.

ராமய்யர்:—(ஆவலாய்) ஏதும் ஜீனி கீனி வந்திருக்கா. சரிதான், இதோ வரேன். நாலைஞ்சு வீசையாவது கிடைக்குமா?

கடைப்பையன்:-நம்ம கடையிலே ஜீனி வியா

பாரம் பண்ணி நாலு மாசமாய்ப் போச்சுங்களே. அதில்லே. உங்க பையன் மணி கடைக்குள்ளே வந்து பதுங்கிககிட்டு இருக்காரு.

ராமய்யர்:—யாரும் வாத்தியார் மேலே கல்லே விட்டு எறிஞ்சாளு என்ன சமாச்சாரம்.

கடைப் பையன்:—பரீட்சை பெயிலாப் போயிடுத்தாம். வீட்டுக்கு வந்தா நீங்க அடிப்பீங்கன்னு அங்கே வந்து ஒளிஞ்சுக்கிட்டாரு. உங்களேச் சமாதானம் பண்ணி செட்டியார் அழைச்சிக்கிட்டு வரச் சொன்னுர்.

ராமய்யர்:—(உள்ளே நோக்கி) ஏய் சீதா! இங்கே வா.

(சீதம்மாள் வருகிருள்)

சீதம்மாள்:—குழந்தை வந்துட்டாளு!

ராமய்யர்:—உன் செல்லக் குழந்தையைக் கூட்டிக்கொண்டு வரப்போரேன். அவனே வரவேற்க மேள தாளத்தோடே ஆரத்தி கரைச்சு வச்சுக்கோ.

சீதம்மாள்:—என்ன சொல்ரிகள். எனக்கு ஒண்ணும் புரியலே.

ராமய்யர்:—உன் செல்வத் திருக்குமாரன், இந்த வருஷம் இருந்த கிளாசிலேயே அடுத்த வருஷத்திற்கும் ஓர் சீட் ரிசர்வ் பண்ணட்டாளும்.

(சீதம்மாள் விழிக்கிருள்)

ராமய்யர்:—இன்னம் புரியலியா? பரீட்சையிலே கோட் அடிச்சுப்பிட்டான்.



கடைப் பையன்:—சின்ன சாமி பயந்துகிட்டு கடையிலே வந்து பதுங்கிக் கிட்டு இருக்காரு.

சீதம்மாள்:—ஒரே வகுப்பிலே இரண்டு வருஷம் படிச்சா, புத்தி விருத்தியாகுமே ஒழிய குறைஞ்சு போகாது. போய், குழந்தையை அதட்டி உருட்டாமல், சமாதானமாய்க் கூட்டிககொண்டு வாருங்கள்.

[போகிருர்கள்]

3

[செட்டியார் மளிகைக்கடை. அவசர அவசரமாகக் கடைப்பையன் பின் தொடர ராமய்யர் வருகிருர்.]

ராமய்யர்:—செட்டியார்வாள்! எங்கே அந்தப் பயல். முதுகுத் தோலே உறிச்சுப்பிட்டுத்தான் மறு ஜோலி.

செட்டியார்:—சாமி! பதருதீங்க. அந்தக் காலத்திலே, நானும் நீங்களும் ஒண்ணுப் படிச்சவங்க. பன்னிரண்டு வருஷ காலத்திலேதான் நாம் இரண்டு பேரும், ஆறு கிளாஸ் படிச்சோம். சின்ன ஐயரைக் கோவிச்சுக்கிராதீங்க. (உள் பக்கம் நோக்கி) சின்ன ஐயரே, வாங்க இந்தப் பக்கம்.

[விடுவிடென்று ராமய்யர் கடைக்குள் நுழைந்து, சாமான்கள் ஸ்டாக் செய்யப்பட்டிருக்கும கிட்டங்கிக்குப் போகிருர். இரண்டு சாக்கு மூட்டைகளுக்கு இடையே மணி உட்கார்ந்திருக்கிருன]

ராமய்யர்:—டேய்! மடப்பயலே. நீ படிச்சுக் கிழிச்ச லக்ஷணத்திற்கு உன்னே அழைக்க வேறே ஆள் வரவேண்டுமோ.

(பதில் இல்லே)

வாயிலே என்னடா கொழுக்கட்டையா!

(செட்டியார் வருகிருர்)

மணி:—அப்பா, நீ கோபிச்சுக்கமாட்டேன் என்று சொனனுல் நான் ஒரு விஷயம் சொல்ரேன்.

ராமய்யர்:—உன்னேக் கோபித்துக்கொள்ளாமல் கொஞ்சுவார்களோ.

மணி:—வாயிலே கொழுக்கட்டையான்னு கேட்டியே, அது கொழுக்கட்டையல்ல. இங்கே ஒரு புதையல் அகப்பட்டது.

ராமய்யர்:—என்னடா உளரரே. என்ன விஷயம்!

செட்டியார்:—(அவசரமாக) வாங்க சாமி, வெளியே போகலாம். ஒரே புழுக்கமாக இருக்கு.

மணி:—அப்பா, இதோ இரண்டு மூட்டை ஜீனி இருக்கு அப்பா. மூட்டையின் மேல பக்கத்தில் மாத்திரம் மொச்சைக் கொட்டையைக் கொஞ்சம் கொட்டி வைத்திருக்கிருர். பசிககிறதே என்று மொச்சைக் கொட்டை சாக்கில் கையை விட்டேன். என்னடான்னு, கைநிறைய ஜீனி வந்தது.

செட்டியார்:—இதென்னடா எளவாப்போச்சு! பரீட்சையிலே பெயிலாப் போர பசங்களுக்கெல்லாம் பதுங்குமிடம் இதுதாளு. கையைக காலே வைச்சுககிட்டு சும்மா இராமல், கண்டதை நோண்டிப் பார்த்து, கழுத்துக்குக் கத்தி வைக்கிரீங்களே. போங்கையா வெளியிலே சீக்கிரம்!

ராமய்யர்:—மணி! வாடா. வாசலில் செட்டியார் என்னடா போர்டு போட்டிருக்கிருர்.



மணி:—"ஜீனி ஸ்டாக் இல்லே" என்ற போர்டு ரொம்ப நாளாகப்போட்டிருக்கார்.

ராமய்யர்:—ஜீனியை உள்ளே பதுக்கிவச்சுண்டே, இல்லே என்ற போர்டு போட்டிருக்கார் என்று ஒரு கம்ப்ளெயின்ட் கொடுத்துட்டுப் போரேன். அப்புறம் அதிகாரிகள் பாடு, செட்டியார்பாடு. திருட்டுத்

தனமா வியாபாரம் பண்ரவாளை திவாந்திரத்திற்குக் கூட அனுப்பிச்சுடுவா.

செட்டியார்:—என்னை ஜெயிலுக்குக் கூட்டி அனுப்பிப்பதில் உமக்கு என்னையா லாபம்!

ராமய்யர்:—எங்கள் வீட்டுக் காப்பிக்கு ஜீனி லாபம்.

[விடுவிடென்று செட்டியார், ஒரு சிறிய பை நிறைய ஜீனியைப் போட்டு, ராமய்யர் கையில் கொடுக்கிறார்]

செட்டியார்:—சாமி! சமாச்சாரத்தை இதோட விடுங்க. நல்லாயிருப்பீங்க.

ராமய்யர்:—மணி! இந்தா இந்தப் பையை பத்திரமா வச்சுக்கோ. இனிமே எப்போது ஜீனி வேணும்னாலும் செட்டியார் கிட்டே வந்து "டொச்சைக்கொட்டை வேணும்" என்று சொல். என்ன செட்டியார்வாள்! நான் சொல்ரது சரி தானே.

செட்டியார்:—ரொம்ப சரீங்க.

[மணியும் ராமய்யரும் வெளியே கிளம்புகிறார்கள்.]

ராமய்யர்:—மணி! நீ பரீட்சையில் பெயிலாப் போனதும் ஒரு விஷயத்திலே நல்லதாப் போச்சு. இல்லாத போனால் இந்த ஜீனியும் கிடைத்திருக்காது.

மணி:—ஆமாம் அப்பா. அந்த ஜீனி மூட்டைக்குப் பக்கத்தில் நெய்டின்னும் வச்சிருந்தார் செட்டியார். மாத்தி மாத்தி ஒரு அடி வயிறு நிரம்ப அடிச்சுட்டேன்.

ராமய்யர்:—அடுத்த வருஷம் இந்தமாதிரி ஜீனிப் பஞ்சம் இருந்தால், நீ பரீட்சையில் பெயிலாகப் போகவேண்டியதுதான்.

மணி (ஏதோ ஞாபகமாக) கண்டிப்பாக அப்படியே செய்யரேன் அப்பா.

[போகிறார்கள்]



சமீபத்தில் மலேயாவுக்கு விஜயம் செய்த பண்டித நேரு சிங்கப்பூரில் ஜப்பானியருடன் கொரில்லா யுத்தம் புரிந்த மாதுடன் கைகுலுக்குகிறார்

# அலமுவின் கடிதங்கள்

என்.எஸ்.ஸ்ரீ

5

அன்புள்ள அம்மாவுக்கு அலமு நமஸ்காரம் செய்து எழுதியது:

எங்கெங்கோ அலைந்து கடைசியில் சௌந்தரத்துக்கு ஒரு வரன் நிச்சயமாகியிருக்கிறது. பையன் சிரோமணிபாஸ்செய்திருக்கிறான். முழியும் முடிச்சுமா சிகப்பா லக்ஷணமாயிருக்கிறான். முகத்தில் நல்ல கலை இருக்கிறது. சொந்த வீடும், ஒரு நாலு ஏகரா பூமியும் இருக்கிறதாம். ஒரே பிள்ளை. பிச்சு பிடுங்கல் கிடையாது. தகப்பனார் கிராம முன்சீப். வாத்தியார் வேலைக்குப் போனாலும் போகலாம்; இல்லாவிட்டால் சொந்த பயிர் வைத்துக்கொண்டு ஒருவனுக்குக் கைகட்டிப் பதில் சொல்லாமல் சுதந்திரமாய் இருக்கலாம். எனக்கென்னவோ இந்த வரன் ரொம்ப பிடித்திருக்கிறது. ஆனால் சௌந்தரம் சொல்கிறாள்: 'போயும் போயும் சிரோமணியா? நாட்டுப்புறவாசம். ஊஹூம், நான் மாட்டவே மாட்டேன். எனக்குக் கல்யாணமே வேண்டாம். அவன் பத்து ரூபா சம்பாதித்தாலும் இங்கிலீஷ் படித்தவனைத்தான்



சிரோமணி!

பண்ணிக்கொள்வேன்" என்று ஆகாத்தியம் பண்ணுகிறாள். "பயித்தியமே சிரோமணியா என்று வாய்க்குச் சுளுவாகச் சொல்லிவிட்டாய். இந்தச் சிரோமணிகள் என்ன கிராக்கி காட்டுகிறதுகள் தெரியுமா? பி. ஏ. மாதிரி வரவர சிரோமணிகளும் மலிந்துவிட்டது. வேலை அகப்படாமல் எத்தனை சிரோமணிகள் அலைகிறதுகள் தெரியுமா? ஆனால் கிட்டப்போனால் பி. ஏ. க்கு மேல் வரதக்ஷிணை கேட்கிறதுகள். நீயோ வாய்க்குச் சுளுவாய் சிரோமணியா என்று சொல்லிவிடுகிறாய். அத்துடன் நான் ஒன்று சொல்கிறேன் கேள். உனக்குத் தெரியாததல்ல. இந்த அரைகுறை இங்கிலீஷ் படித்துவிட்டு 40-க்கும் 50-க்கும் உத்தியோகத்தில் அமர்ந்து, கொத்தவால்சாவடி மாதிரி ஒரு வீட்டில் 10குடித்தனத்துக்கு மத்தியில் எலிபோன்மாதிரி ஓர் அறையில் புழங்குவதைவிட நரகலோகம் வேறு வேண்டாம். ஒரே அறை. அதிலேயே சமையல், அதிலேயே படுக்கை. அதிலேயே ஒரு மூலையில் நோயாளிக்குழந்தை. மற்றொரு மூலையில் தள்ளாத வயதான நோயாளித்தாயாரோ, தகப்பனாரோ இதன் மத்தியில் யாராவது உறவினரோ, சிநேகிதர்களோ 2 பேர் வந்துவிட்டால், அதுவும் குடும்பத்தோடு வந்துவிட்டால்? அதிலும் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும். ஓரிரண்டு நாள் தங்கியும் விட்டார்களானால், இராத்திரி படுப்பதெங்கே? அதிலும் இளம் தம்பதிகளாக இருந்துவிட வேண்டும். சே! சே! ரொம்ப மோசமான வாழ்க்கை! காலையில் எழுந்தால் குழாய் சண்டை. எல்லோரும் தான் ஆபீஸ் போயாக வேண்டும். எல்லோரும்தான் சீக்கிரம் ஸ்நானம் செய்துவிட்டுச் சமையல் செய்தாக வேண்டும். ஒரு மூலையில் குழந்தைகள் சண்டை, நான் உலர்த்தியிருந்த விறகில் இரண்டு விறகு காணவில்லை: எங்கள் குழந்தையின் கௌனைக் காணோம்; 'நான் செயினைக் கழட்டி வைத்துவிட்டு ஸ்நானம் செய்தேன் வரும்போது எடுத்துக் கொண்டுவர மறந்துவிட்டேன். லக்ஷ்மி மாமி தான் அங்கே வந்தாள்' என்பது போன்ற சந்தேகங்களும், கலாட்டாக்களும், கணக்கு வழக்கு இருக்காது. ஒரே சந்தை, இரைச்சல்தான் இது தான் 40,50 சம்பாத்தியமுள்ள நகர குடும்பம். அழகாக கிராப்பை நிகு நிகுவென்று வாரிவிட்டுக்கொண்டு, மூக்குக்கண்ணாடி, கையில் ரிஸ்ட்வாச், புல் சூட்டு, வாயில் சிகரெட் துண்டு, இவைகளுடன் டாக் டாக் என்று தெருக்களில் நடந்து போகிறார்களே என்று பார்க்கிறாயா? இந்த கொத்தவால்சாவடியிலிருந்து கிளம்பும் கும்பல்தான் அது பாதி வழியில் கால் சுளுக்கிக்கொண்டால், ஆபீஸ் போய்ச் சேர டிராம் சார்ஜ் இராது. டிரெஸ்ஸைக் கண்டு மயங்கிவிடாதே. ஒண்ணே காலணா உத்தியோகஸ்தன் ஆயிரம் ரூபா உத்தியோகஸ்தனைவிட அமர்க்களமாயிருப்பான். ஆகையால் நான் சொல்கிறேன் கேள். வர வர நகர வாழ்க்கையை விட கிராம வாழ்க்கையே மேல். காயோ, கரியோ, பாலோ, தயிரோ எல்லாம் எதேஷ்டமாய்க் கிடைக்கும். நன்றாக சாப்பிட்டுக்கொண்டு சுகமாக இருக்கலாம். நாய்கூட



துப்பாத இந்த ரேஷன் அரிசியைச் சாப்பிட்டுக்கொண்டு (தண்ணீர் கொட்டி இரண்டு நாள், ஆன பழையது மாதிரி 'நொசநொச' வென்ற சாதம்) ஏன் இந்தப் பட்டண வாழ்க்கை வேண்டுமென்று ஆசைப்படுகிறாயோ தெரிய

வில்லையே. ஸௌகர்யம் ஒன்றும் இல்லாவிட்டால் தான் இருக்கவே இருக்கிறது இந்த நரக வாழ்க்கை. ராஜா மாதிரி பையன் லக்ஷணமயிருக்கிறான். ஏனோ உனக்கு இப்படி புத்தி கெட்டுப் போய் விட்டது தெரியவில்லையே? என்று மாமனாரும் 'இவரும்' மாற்றி மாற்றி உபதேசம் செய்த பிறகு தான் சௌந்தரம் ஒருவாறாக அந்த கிராமணியைக் கல்யாணம் செய்து கொள்வதாய் ஒப்புக்கொண்டிருக்கிறாள்.

மைத்துனனுக்கும் கல்யாணம் நிச்சயம் ஆகும் போலிருக்கிறது. இந்த வருஷம் தான் எப். ஏ. பாஸ் செய்தாளாம். நெற்றியில் தவழ்ந்து விளையாடும் சுருள் வெட்டு மயிர் முகத்தையே மறைக்கும் வண்டி சக்கரம் மாதிரி மூக்குக்கண்ணாடி, காதில் மூக்கில் ஒன்றும் கிடையாது, மூக்கே குத்தவில்லை போலிருக்கிறது. மூக்கில் திருகு போடும் துவாரத்தையே காணோம். கழுத்தில் மினுக் மினுக்கென்று மெல்லியதாய் ஒரு வடம் செயின், சரிகை பார்டர் போட்ட தும்பைப் பூ மாதிரி சலவை செய்த வெள்ளைச் சித்தாடைமுன்னே கவிழ்ந்து விடுவதுபோல் இரண்டரை அங்குலம் குதிக்காலண்டை பீடம் வைத்த 'பூட்ஸ்' சீனுக்காரர்களும் ஜப்பான்காரர்களும் தத்தித்தத்த நடக்கிறார்களே நீ பார்த்ததில்லே? அதே தான். மூன்று வயதிலிருந்து 'கான்வெண்ட் ஸ்கூலில்' தான் படிப்பாம். நெற்றியில் குங்குமமா சாந்தப் பொட்டா ஒன்றும் கிடையாது. ரிஸ்ட்வாச் முழங்கை வரையில் ஓடி விளையாடும் மெல்லியதாய் இரண்டு வளையல்கள். வீணை நன்றாக வாசிக்கத் தெரியுமாம். தகப்பனாருக்கு ஸப் ஜட்ஜ் வேலையாம்.

இதெல்லாம் குடுத்தனத்துக்கு ஏற்ற பெண்களில்லை. சமையல்காரன் சமையல் செய்து போட்டால், சாப்பிட்டு விட்டு, நாசூக்காக ஈஸி சேரில் சாய்ந்து பத்திரிகையோ, புத்தகங்களோ படித்து விட்டு காரில் ஏறிக் கொண்டு கிளப்புக்கும், பீச்சுக்கும் போய் வரத்துக்குத்தான் லாயக்கு. அதுக்கெல்லாம் மனுஷ்யாக்கள் வேறே இருக்கிறார்கள், நம்ம குடித்தனத்துக்குத் தகுந்த மாதிரி குடித்தன வேலையைக் கவனித்துக்கொண்டு உள்ளதைச் சாப்பிட்டு விட்டு வீட்டோடு இருக்கக்கூடிய தாய் இருந்தால் போதும்," என்கிறாள் மாமியார். ஆனால் மைத்துனனுக்கு இந்தப் பெண்தான் பிடித்திருக்கிறதாம், இவளையே தான் கல்யாணம் செய்து கொள்ளப்போகிறாராம். சொல்லி விட்டார்.

எனக்குக் கூடப் பெண் ரொம்ப 'ராங்கியாய்' இருக்கும் போலத்தான் தோன்றுகிறது. 'பிராம்மணீகமே' இன்னதென்று தெரியாதுபோல் தோன்றுகிறது. இருந்தாலும் பெண்பார்ப்பதற்குலக்ஷணமாய் நன்றாய் இருக்கிறாள். ஒரு விதத்தில் கோபு இந்தப்பெண்ணைப் பண்ணிக் கொள்வதுதான் ஸரி என்று தோன்றுகிறது. அப்பொழுதுதான் இந்த மாமியார் காரியின் கொட்டம் அடங்கும். நான்தான் முன் கடிதத்திலேயே உனக்கு எழுதியிருந்தேனே. இப்படிப்பட்டதுக்கெல்லாம் இப்படித்தான் வந்து அமையும் என்று. சௌந்தரம் தலைகீழாய்க் கவிழ்ந்து போனாள். வந்த வரனுக்கெல்லாம் ஏதாவது ஒரு நொத்து சொல்லிக் கொண்டே இருந்தாள். எந்த மாதிரி வரன் அவள் வேண்டாமென்று சொன்னாளோ அதே தான் கடைசியில் வந்து முடிந்தது. நான் பாட்டுக்கத் தெய்வமே என்று இருக்கிறேன். அன்றைக்கு ஏதோ அசந்து மறந்து பாடிவிட்டேனாம். தேவடியாள் மாதிரி பாட்டும் கூத்தும் என்னடி வேண்டிக் கிடக்கிறது? என்று எடுத்துப் போட்ட மாதிரி சொன்னாள். அவர் பாவம்! ஆசையாய் உடுத்திக்கொள் என்று ஒரு புடவை வாங்கிக் கொடுத்தாரானால், கம்மண்டாட்டிகள் புடவை என்று 'அகடுகழித்தாள்'' அதான் மன்னிக்கு அனுப்பி வைத்தேனே அந்த புடவைதான். இப்பொழுது வரப்போகிறவள் 'சுவேத வஸ்திர தாரிணியாகவே' காட்சியளிக்கப் போகிறாள். எப்பொழுதும் வீணையும் கையுமாக ஆம்படியானுடன் மாடியை விட்டு வரப்போகிறதில்லை. நானாக இருக்கவே கேட்டுக்கொண்டிருந்தேன், எல்லாருமே அப்படி இருந்து விடுவார்களா என்ன! இவள் ஒன்று சொன்னால் அவள் பதிலுக்கு நாலு சொல்லி வாயை அடக்கிவிட மாட்டாளா? அத்துடன் இவர் மாதிரியா என்ன ஒன்றும் காதில் போட்டுக்கொள்ளாதது போல் இருந்து விடுவதற்கு. கோபு இந்தக் காலத்து பிள்ளையல்லவா? அவரே பெண்டாட்டிக்குப் பரிந்து கொண்டு வந்துவிடமாட்டாரா?

நான் சொல்கிறேன், வேண்டுமானால் பாரேன். இப்படிப் பட்டதையெல்லாம் கடவுள் இப்படித்தான் தண்டிப்பார். கடவுள் ஒருவர் இருக்கிறார்.

இப்படிக்கு,

உன் அன்புள்ள அலமு.

..............காலையில் எழுந்தால் குழாய்ச் சண்டை !..............

# குரூபி



—தி அ. ராமனுநன்—



ஆம் நான் குரூபிதான். அவலக்ஷணங்கள் யாவும் உருட்டித் திரட்டி வைத்த ஒரு நடை பிணம். அம்மாதான் சொன்னாள். அப்பொழுது எனக்கு ஐந்து வயதாம். வைசூரி போட்டியிருந்ததாம். கண்ணைத் திறக்காது இன்றோ, நாளையோ என்று கிடந்தேனாம். ஆனால் நல்ல வேளை, எந்த தெய்வத்தின் அனுக்கிரகமோ 'பிழைத்துவிட்டேன்.

தலைக்குத் தண்ணீர் விட்டதும், ஒரு கண் மூடியிருந்ததைக் கவனித்தாளாம். மெல்லத் திறந்து பார்த்தாளாம். அவ்வளவுதான், மூர்ச்சையாய்விட்டாளாம். அவள் கண்மணிக்கு ஒரு கண் போயிருந்ததாம்.

மேலெல்லாம் வடுக்கள், பூ விழுந்த ஒரு கண். இளம் வயதிலே வழுக்கை விழுந்த தலை. நிறமோ காகம் கருப்பு. யோசித்துப்பாருங்கள் நான் எப்படியிருப்பேன் என்று.

பள்ளிக்கூடத்தில் பையன்கள்கூட என் பக்கத்தில் உட்கார அருவைப்படுவார்கள். ஒருநாள் பெரிய பண்ணையார் பிள்ளை ரகு ஒரு வேலை செய்து வைத்திருந்தான். வகுப்பில் நுழைந்ததும் எல்லோரும் கொல்லென்று சிரித்தார்கள். என்னடா என்று பார்த்தேன். என் பெஞ்சு மட்டும் தனியாய் மற்றொரு இடத்தில் போடப்பட்டிருக்கிறது, ஏன் என்று கேட்டேன். அதற்கு அவர்கள் உன்னைப்போன்ற குரங்கிடம் யாருடா உட்காருவார்கள் என்றனர். மற்றவர்களும் சிரித்தார்கள். எனக்குக் கண்களில் நீர் ததும்பிவிட்டது.

வாத்தியார் வந்ததும் அவரிடம் என் குறையைச் சொன்னேன். அவரோ, "ஆமாம்! அதில் என்ன தப்பு" என்று கேட்டார். உடனே வீட்டிற்கு எழுந்து போய்விட்டேன். வீட்டில் அம்மாவின் மடி மீது தலையை வைத்துக் கொண்டு அழுதேன். என் தாயும் அழுதாள். உடனே நான் அந்தப் பள்ளிக்கூடத்தைவிட்டு விட்டு, மறுநாள் பட்டணத்திலே உள்ள எங்கள் பெரியம்மா வீட்டுக்குப் போனோம். அங்கும் என்மீது விருப்பமுள்ளவர்கள் ஒருவரையும் நான் காணவில்லை.

எனக்கென்று தனி "லோட்டா, தனி படுக்கை" எல்லாம் தனி. ஏனெனில் என் குரூபித்தனம் நான் தொட்டத்தில் எல்லாம் ஒட்டிக்கொண்டு விடும் என்றுதான். எப்படியோ நானும் காலம் தள்ளித் தள்ளி "ஸ்கூல் பைனல்" பாஸ் பண்ணிவிட்டேன். மேலும் எப்படியோ இலவச போதனை பெற்று கல்லூரிப்படிப்பையும் தொடங்கினேன்.

அப்பொழுது ஒரு நாள் தான் இந்தச் சம்பவம் நடந்தது. மாலை ஐந்து மணி இருக்கும். ஸரஸா அதாவது எங்கள் பெரியம்மாவின் மகள் கண்ணாடியின் முன் நின்றுகொண்டு தன்னை அலங்காரம் செய்துகொண்டிருந்தாள். அவள் வெளியே புறப்பட்டுப் போனதும் நானும் சிறிது நேரம் அந்தக் கண்ணாடியின் முன்பாக நின்று பார்த்தேன். திடீரென எனக்கு ஒரு யோசனை தோன்றிற்று. ஏன் நாமும் கொஞ்சம் பவுடர் போட்டுக்கொள்ளக்கூடாது என்று நினைத்தவண்ணம் பவுடர் குப்பியை மெள்ளத் திறந்து கையில் சிறிதுகொட்டிக்கொண்டேன். தேய்த்துக்கொள்ளும் சமயம் பார்த்து எங்கிருந்தோ வந்து சேர்ந்தாள். ஸரஸா இன்னும் சில பெண்களுடன் என்னைப் பார்த்தவுடன் "இங்க பாருடி இந்த மன்மதக் குரங்குக்கு பவுடர் ஒன்றுதான் குறைச்சல் முகரையைப் பாருடி மூஞ்சூரு மாதிரி" என்றாள். உடனே எல்லோரும் நகைத்தனர்.

கண்களில் நீர் மல்க அறையை விட்டு ஓடினேன். இரவு சாப்பாடு வேளை வந்தது. அம்மா பரிமாறிக்கொண்டு வந்தாள். திடீரென்று பெரியம்மா "இந்தாடாப்பா மன்மதா, உன் முகரைக்கு பவுடர் ஒன்றும் குறைவாயில்லை. அதனால் நீ இன்னொருத்தர் காசு கொடுத்து வாங்கியதை ஒன்றும் உன் முகரையில் கொட்டிக்க வேண்டாம்" என்றாள். உடனே சாப்பாட்டை அப்படியே வைத்துவிட்டு எழுந்து போய்விட்டேன்.

அப்பொழுது கடைக்குட்டி சீனு சொன்னது என் காதில் விழுந்தது. "இந்த நாய் சாப்பிடாவிட்டால் பரவாயில்லை. நம்மாத்து டாமியாவது சாப்பிடட்டும்" என்றான். உடனே ஸரஸா "அடே டாமி! இந்தச் சாதத்தைச் சாப்பிட்டால் அப்புறம் அதுவும் இதுபோல் ஆய்விடும்டா" என்றாள். எப்பொழுதும்போல இன்னும் என்னைப்பற்றி என்னவெல்லாமோ சொல்லிச் சிரித்துக்கொண்டிருந்தனர்.

அன்று இரவு அம்மா என்னைத் தனியாய் கூப்பிட்டு துக்கம் நெஞ்சு அடைக்க "ஏண்டாப்பா உனக்கு இந்த வம்பெல்லாம்" என்று பேச ஆரம்பித்தவள் அதற்குமேல் பேச முடியாமல் போய்விட்டாள். நான் அதுவரை அடக்கி வைத்திருந்த என் துக்கமெல்லாம் அழுகை ரூபமாக வெளி வந்தது. "அம்மா நீயும் என்னைப் பத்து மாதம் சுமந்துதானே பெற்றெடுத்தாய். எனக்கும் அவர்களைப்போல்ஆசையிராதே என்றேன். ஆயினும் நாம் இங்கு இருக்க வேண்டாம் தனியாய்ப் போய்விடுவோம்" என்றேன்.

மறுநாள் அதன்படி நாங்கள் வேறொரு இடத்திற்குப்

போனேன். அம்மா ஒரு இடத்தில் சமையல் வேலை செய்து 20 ரூபாய் சம்பாதித்தாள். எப்படியோ கஷ்ட ஜீவனம் செய்து நானும் பி. ஏ. பட்டம் பெற்றேன். உடனே வேலை தேடப் புறப்பட்டேன். அம்மாவும் பெண் பார்க்க ஆரம்பித்தாள், ஆனால் என் குரூபித்தனம் அதற்கு இசைபவில்லை.

என் அழகைக் கண்ட யார் தான் எனக்குப் பெண் கொடுக்க முன் வருவார்கள். அழகு இல்லாவிடில் பணமாவது இருக்க வேண்டும். அதுவும் இல்லையெனில் யார்தான்என்னை மாப்பிள்ளையாக்க இஷ்டப்படுவார்கள்.

கடைசியில் என் மாமாவின் பெண்ணைப்பார்த்தோம். ஆனால் என்னைப் பார்த்த பிறகு என் மாமா பெண்ணைக் கொடுக்க எனக்கு ஆவல்தான். ஆனால் அவளுக்குத்தான் என்னமோ தெரியாது என்று மழுங்கலாகப் பேசிவிட்டார். என் மாமாவின் பெண்ணே என்னைக் கட்டிக் கொள்வதைவிட கிணற்றில் விழுந்து இறக்கலாம் என்று மிகவும் துடுக்காகக் கூறினாள்.

நாளடைவில் இதே வருத்தத்தால் என்னைப் பத்து மாதம் சுமந்து பெற்றெடுத்து, சீராட்டி வளர்த்து எனக்காகச் சொல்லவொணு இன்னல்கள் புலவடைந்த என் தாய் இறந்து போனாள்.

ஆனால் திடீரென்று காலச் சக்கரம் சுழன்றது.எட்டி நின்ற அதிர்ஷ்டம் என்னை நெருங்கிற்று;அதாவது என் தூர உறவினர் ஒருவர் வார்சு இன்றி இறந்ததன் காரணமாக அவருடைய சொத்துக்கள் முழுவதும் என்னைச் சேர்ந்தது. (சுமார் 4 லட்சம்) நானும் பெரிய மனிதன் ஆனேன். என்னை யாரெல்லாம் கண்ணெடுத்துப் பார்க்கவும் கசப்புற்றார்களோ அவர்கள் என்னை அன்போடு நோக்கினர். ஸரஸா என்னை இப்போது அடிக்கடி பார்க்க வந்தாள். பெரிய மனிதர்கள் நான்,நீ என்று போட்டி போட்டுக்கொண்டு பெண் கொடுக்க வந்தனர்.

ஆனால் இதையெல்லாம் விட என் மாமா எனக்கு அவருடைய பெண்ணைக் கொடுக்க ஆசை என்று கூறியதுதான் எனக்கு ஆச்சர்யத்தை விளைவித்தது. ஆனால் தற்போது என் மாமாவின் பெண்ணே என்னைத்தான் கல்யாணம்செய்துகொள்வேன், இல்லாவிடில் கிணற்றில் விழுந்து இறந்து போவேன்" என்கிறாள்.

ஆஹா! என்ன மாறுதல், குரூபியான எனக்குப் பணம் அழகைக் கொடுத்துவிட்டது. அவலக்ஷணம் பொருந்திய என்னை 32 லட்சணங்களும் உள்ளவனுகச் செய்துவிட்டது. காரி உமிழ்வேன் என்று சொன்ன வாய்கள் கட்டி முத்தம் கொடுப்பேன் என்றது. ஆம். நான் பணத்தினுல் புது மனிதனுகித்தான் விட்டேன்.

ஒரு நாள் இரவு உறங்கிக் கொண்டிருக்கும்போது என் அறையில் வந்த மாதிரியாகத் தோன்றியது. யார் என்று கேட்டேன். அதற்கு அந்தக் கருத்த உருவம் "என்றும் உன் மீது அன்பு செலுத்துபவன். ஏழை, பணக்காரன், கெட்டவன், நல்லவன், உயர்ந்தவன், தாழ்ந்தவன், வஞ்சகன், அரசன், ஆண்டி என்ற வித்தியாசங்களில்லாதவன். யாவரும் எனக்குச் சமம். எல்லா வித மான துன்பமும், நோயும் என்னை அடைந்தால் தீர்ந்து போகும். திக்கற்றவர்களுக்கு மனச்சாந்தி அளிப்பதும், உன்னைப் போன்ற மகா குரூபிகளிடத்திலும் அன்பு செலுத்துவதும் எனது முக்ய தொழில் என்றது." "என் தாயைத் தவிர என்னிடம் அன்பு செலுத்தக்கூடியவர்களும் இருக்கிறார்களா" என்றேன். அதற்கு அந்த உருவம் 'உன் துன்பங்கள் தீர்ந்து உனக்குச் சாந்தி கிட்ட என்னை அடை. என்னை அணைந்துகொள் வா! வா!! வா!!! என்றது திடீரென கண்விழித்தெழுந்தேன். மினுக் மினுக் என்று எரிந்துகொண்டிருந்த விளக்கைப் பெரிதாக்கி அறையைச் சோதித்தேன். ஒன்றையும் காணேம். ஆம். கனுத்தான், ஆனால் கனவு எனக்கு நல் நினைவையே கொடுத்தது.

திறந்த ஜன்னலின் வழியாய் வெளியே பார்த்தேன். பால் போல் காய்ந்த நிலாவில் தூரத்தில் சமுத்திரம் தெரிந்தது. "இங்குதான் உன் அல்லல்கள் தீர்ந்து சாந்தி கிட்டும்" வா! வா! என்று கூப்பிடும் கடலை நோக்கி நடந்தேன். என் சொத்துக்கள் எல்லாவற்றையும் ஏழைகளின் தர்மத்திற்காக எழுதி வைத்தேன். துன்பத்திலே பிறந்து, துன்பத்திலே வளர்ந்த எனக்கு என் முடிவு இதுவரை நான் ஸ்பர்சித்து அறியாத ஒரு புது இன்பத்தை தரப்போகிறது. இனி நான் பலராலும் வெறுக்கப்பட்ட குரூபியுமல்ல, பலரால் விரும்பப் பட்ட பணக்காரனுமல்ல.

# உணவு நெருக்கடி

★

இந்தியாவிலும் மேற்கு ஜெர்மனியிலும் இருக்கும் உணவு நிலைமை பற்றிக் கடைசியாகக் கிடைத்திருக்கும் தகவல்களைக் கண்டு பிரிட்டிஷ் மந்திரி சபை பெரிதும் கலக்கங் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. இந்த நெருக்கடியான நிலைமையைச் சமாளிப்பதற்கான கூட்டு நடவடிக்கைகள் பற்றி பி. ஹெர்பெர்ட் மாரிஸன் அமெரிக்க ஜனாதிபதியுடன் வாஷிங்டனில் கலந்து பேசுவார்.

பிரிட்டனில் சமீபத்தில் அமுலுக்கு வந்த சிக்கன ஏற்பாடுகள் பற்றி எழுதுகையில், அமெரிக்காவிடமிருந்து அதிக சப்ளைகள் கிடைக்கவேண்டுமென்று பி. மாரிஸன் வற்புறுத்துவாரென்று லண்டன் பத்திரிகைகள் எழுதுகின்றன. உண்மையில், சென்ற மார்ச்சில் ஸர் பென்ஸ்மித் விட்ட இடத்திலிருந்து பி. மாரிஸன் இந்த வேலையை மேற்கொள்வார். ஸர் பென் ஸ்மித்துக்கும் இவருக்கும் ஒரு வித்தியாசமென்னவென்றால், இவர் பிரிட்டிஷ் மந்திரி சபையில் ஒரு முதன்மையான ஸ்தானம் வகிப்பவர். ஸர் பென் மந்திரிசபையில் அங்கத்தினரல்ல.

உணவு நிலைமை அடுத்த வருஷமும் மோசமாக இருக்குமென்றும், பல இடங்களில் வறட்சி ஏற்பட்டால் நிலைமை இன்னும் படுமோசமாகக்கூட ஆகிவிடக்கூடுமென்றும் ஐக்கிய தேச உணவு விவசாய ஸ்தாபனம் கூறுகிறது. அடுத்த வருஷம் கோதுமையில் மட்டிலும் குறைந்தபட்சம் 30 லட்சம் டன் துண்டு விழுமென்று தெரிவதாக சமீபத்தில் வெளியான உணவு—விவசாய ஸ்தாபன அறிக்கை கூறுகிறது. ஐரோப்பாவுக்கும் தூரக்கிழக்குக்கும் மொத்தம் சுமார் 3 கோடி டன் தேவையாயிருக்குமென்று கணக்கிடப்படுகிறது. வட தென் அமெரிக்காக்களிலிருந்தும் கிடைக்கக்கூடிய தான்யங்களின் அளவு மொத்தம் சுமார் 2 கோடியே 70 லட்சம் டன் என்று கணக்கிடப் படுகிறது.

உலக மக்களில் பாதிப் பேர் அடுத்த வருஷம் அரைப் பட்டினி நிலைமையிலே இருப்பார்களென்றும், இன்னும் நான்கு அல்லது ஐந்து வருஷத்துக்கு உலகம் நெருக்கடியான நிலைமையிலேயே இருக்குமென்றும் உணவு-விவசாய ஸ்தாபன செகரடரி ஜெனரல் ஸர் ஜான் பாய்ட்-ஆர் கூறுகிறார்.

வருங்காலத்தில் நிலைமையைச் சமாளிப்பதற்கு "உலகத்தின் உணவு மூலங்கள் எல்லாவற்றின் மீதும் கண்டிப்பான, நிரந்தரக் கட்டுப்பாடு இருப்பதற்காக இதற்குமுன் இருந்திராத அளவில் சர்வதேச ஒப்பந்தம் ஏற்படவேண்டுமென்று மே 20-ந்தேதி நடைபெறப்போகும் மகாநாட்டில் தாம் வற்புறுத்தப்போவதாக ஸர் ஜான் பாய்ட்-ஆர் கூறுகிறார். "நெருக்கடியைப் பூரணமாகச் சமாளிப்பதற்குப் போதிய அதிகாரமும், வசதிகளும், தற்போதுள்ள எந்த ஸ்தாபனத்துக்கும் கிடையா. இந்தத் தாற்காலிக ஸ்தாபனங்கள் எவ்வித நிலைமையைச் சமாளிப்பதற்காக அமைக்கப்பட்டனவோ, அதையும் மிஞ்சி வெகு தூரம் போய்விட்டது தற்போதைய நிலைமை" என்று அவர் அறிவித்தார்.

தூரக்கிழக்கிலிருக்கும் "உன்ரா"வைத் தவிர மற்றெல்லா ஸ்தாபனங்களும் இந்த வருஷக் கடைசியில் கலைக்கப்படவிருக்கின்றன. முற்றிலும் புதிதான ஐக்கிய தேச ஸ்தாபனம் ஒன்றை அமைக்க வேண்டுமென்று ஸர் ஜான் எடுத்துக்கூறுவார்.

இதற்கிடையில், ஏற்கெனவே டிசம்பர் 31-ந்தேதிவரை நீடிக்கப்பட்டிருக்கும் கூட்டு உணவு போர்டைத் தொடர்ந்து நடத்திவரும் விஷயம் 1947-ம் வருஷத்து உணவு நிலைமை தெளிவாகத் தெரிந்த பிறகு, பரிசீலனை செய்யப்படுமென்று பிரிட்டிஷ்-கனடிய அமெரிக்க அறிக்கையொன்று கூறுகிறது. யுத்தமும், அதைப் பின் தொடர்ந்து பல நாடுகளில் ஏற்பட்ட வறட்சியும், "1945-ம் வருஷப் பிற்பகுதியில், உணவு தான்யம் உண்மையில் கிடைத்த சப்ளையை விட அதிக வேகமாகச் செலவழிக்கப்பட்டதுமே இந்த உணவுத் தட்டுதலுக்குக் காரணமென்று அந்தக் கூட்டு அறிக்கை கூறுகிறது. இந்த போர்டும் இதன் கமிட்டிகளும், சப்ளைகள், தேவைகள்பற்றிய சகல தகவல்களையும் சேகரிப்பதற்கும், தேசியத் திட்டங்களைப்பூர்த்தி செய்வதற்கும் ஒரு அரங்கமாக உபயோகப்படும்.

பஞ்சத்தைச் சமாளிப்பதற்குச் சக்திவாய்ந்த சர்வதேச ஸ்தாபனம் ஒன்று வேண்டுமென்று ஸர் ஜான் பாய்ட்-ஆர் கூறுவதை ஆதரித்து, "ஐக்கிய தேச ஸ்தாபனத்தில் இதுவரையில் அங்கத்தினராகாத ஆர்ஜென்டிருவும், உற்பத்தி, உபயோக விவரங்கள் தற்போது வெளியிடாத சோவியத் ருஷ்யாவும் அந்த ஸ்தாபனத்தில் கட்டாயம் இருக்கவேண்டும்' என்று டெய்லி டெலகிராப் எழுதுகிறது.



படத்தில் காணப்படுவதுதான் 'பிரிட்டிஷ் ஜிப்'கார் இது மலைகள் மீது அதிசுலபமாக ஏறுவதுடன், நீரில் மிதந்து செல்லவும் கூடும்.

## "தியாகய்யா" சதாப்தி உதவிக் கச்சேரி





தியாகய்யா சதாப்தி நிதிக்காக ஸ்ரீமதி எம். எஸ். பம்பாயில் கச்சேரிசெய்தார். பிரதம மந்திரி பி. ஜி. கெர் தென்னாட்டு கோகிலத்தை அபாரமாகப் பாராட்டிப்பேசினர். (வலது) பெண்கள் இருந்த இடத்தின் ஒரு பகுதி அங்கு கூடியிருந்தது எவ்வளவு பெரிய கூட்டம் என்பதைக் காட்டுகிறது.



பங்களூரில் 'சுதேசமித்திரன்' ஏஜண்டான ஸ்ரீ எஸ். வி. ஆர். அய்யர் குமாரன் ஸ்ரீ எஸ். ஆர். வெங்கடாசலத்திற்கும், கோயமுத்தூரில் 'மெயில்' ஏஜண்டான ஸ்ரீ எஸ். வி. சுப்ரமண்யன் குமாரத்தி சௌ. நாகலக்ஷிமிக்கும் கோயமுத்தூரில் 6-ம் தேதி யன்று விமரிசையாக விவாகம் நடைபெற்றது.



கல்கத்தா இந்திய வியாபார சபை உதவி காரியதரிசி ஸ்ரீ வி. சுப்ரமண்யத்திற்கும் ஸ்ரீ எம். எஸ். நடேசய்யர் குமாரத்தி சௌ. மீனாக்ஷி சுந்தரத்திற்கும் ஏப்ரல் 19-ம் தேதி குடியாத்தத்தில் சிறப்பாக விவாகம் நடந்தேறியது.






ப்பு கண்டு பிடிப்பதற்கு முன்பு ஜனங்கள் தேய்த்துக்குளிக்க இயற்கை பொருள்களையே உபயோகித்துவர நேர்ந்தது. அவற்றிலொன்று சீனிக்காய் பொடி. சீனிக்காய் மரத்தின் பழுத்த காய்களை பறித்து வெயிலில் உலர்த்தி பொடியாக்கி, அந்தப்பொடியை ஜலத்திற்குழைத்து தேய்த்து வந்தனர். இன்னும் சிலர் சீனிக்காய் பொடி உபயோகித்து வருவதுண்டு. ஆனால் ஹமாம் ஸோப்பு வந்ததோடு இதுபோன்ற பழைய வழிகள் மறைந்து வருகின்றன. ஏனெனில், பழைய கால பொருள்களின் சிறந்த அம்சங்களனைத்தும் கூடுதல் சௌகரியமும் சுகமும் அளிக்கும்விதத்தில் நறுமணங் கமழ்வதும் எளிதில் நுரையளிப்பதுமான ஹமாமில் நன்கு பொருந்தியமைத்திருக்கின்றன.




## ஹமாம்

உங்கள் ஸ்நானத்திற்குகந்த பெரிய ஸோப்பு.

டாம்கோ விற்பனை இலாகா,

19A, வாணியர் தெரு, த. பெ. நெ. 31, மகராஸ்.




தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்,

டாடாபுரம் & பம்பாய். TS. 4694




### மாதவிடாய் நின்றிருந்தால்



குமாரி (TABS) உபயோகித்தால் மீண்டும் ஏற்படுவதுடன் பிற்காலத்திலும் தொந்திரவு ஏற்படாது. தீங்கற்றது. விரைவில்பலன் தரும். விலை ரூ. 3. கடுமையானதற்கு ரூ. 5. கர்ப்பத் தடை 6 மாதங்களுக்கு ரூ. 4. (வி. பி. அணா 12 பிரத்யேகம்) Mrs. P. DEVEE, F.D.S.(S.W) Tollygunge: CALCUTTA ஸ்டாகிஸ்டுகள்: (1) ஹாரி & ஸன், 98. சைபையர் ரோட். மகராஸ் (2) ராகவன் & கோ., ஸ்ரீ நரசிம்மராஜ ரோட், பெங்களூர் ஸிடி.

### தமிழில் ஹோமியோபதி

வைத்தியத்தை தபால் மூலம் படித்துப் பயனடையுங்கள். விவரத்திற்கு 2 அணா ஸ்டாம்புடன் எழுதுக. தமிழ் ஹோமியோபதி காலேஜ், ஈரோடு



## ஜேம்ஸ்

## கிரைப் ஸ்டாப் வாட்டர்

குழந்தைகளுக்கு புஷ்டியைத் தருகிறது

ஜேம்ஸ் பார்ப்யூமரி கம்பெனி

